# பார்த்தாலே உறக்கம் வருமே!

ஏன் வராது! படுக்கைமீது போட்டிருப்பது உலகப் பிரசித்தி பெற்ற ப்யோகேல் விரிப்பு! உன்னதமான பருத்தி இழையிலிருந்து பிரத்தியேகமாக செய்யப்படும் இந்த பாம்பே டையிங் விரிப்புகள் பட்டுப் போல மென்மையானவை; நீடித்து உழைக்கும் என்று சொல்லத் தேவையில்லை. இவை ப்ளெயினாகவும், கோடுகளுடனும், விதவிதமான பல டிஸைன்களிலும் கிடைக்கின்றன. (இவற்றிற்கு ஜோடியான டவல்களும் கிடைக்கும்!) எமது உலகப் பிரசித்தி பெற்ற ப்யோகேல் படுக்கை விரிப்புகளைக் கொண்டு உங்கள் படுக்கையறையை கண்டோர் பொறாமைப் படும்படி வசதியாகவும், வசீகரமாகவும் வைத்துக் கொள்ளுங்கள். அவற்றின் இதமான ஸ்பரிச சுகத்தில் இன்பமாக உறங்குங்கள்! இன்றே ப்யோகேல் விரிப்புகளை வாங்குங்கள்!

## பாம்பே டையிங்

BD 6258




# கல்கி

பொருளடக்கம்

பிலவங்க, புரட்டாசி 15 - அக்டோபர் 1








"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.







தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 9



# தனிமனிதனின் சீலமே தேச வாழ்வின் ஆதாரம்

நாட்டு விவகாரங்கள் அபிவிருத்தி அடைய வேண்டுமானால் தனி மனிதர்கள் நேர்மையுள்ளவர்களாக வேண்டும். பல துளிகள் சேர்ந்ததே மழை. மக்கள் ஒவ்வொருவரின் நலமும் சேர்ந்ததே நாட்டின் நல்வாழ்வு. 'போதுமான சௌகரியங்கள் செய்துகொண்ட பின் நல்லவனாயிருப்பேன்' என்று கூறுவதில் பொருளில்லை. ஒவ்வொருவரும் தனது சௌகரியத்துக்காகத் தவறான வழியில் சென்றால் தேசத்தில் சீலம் தழைக்காது.

தேசத்தின் விவகாரங்கள் சரியாகயிருக்க வேண்டுமாயின் நாட்டு மக்களின் நடத்தை நல்லபடியாயிருக்க வேண்டும். கமான் வளைவில் எல்லாக் கல்களையும் இணைத்து நிறுத்தும் மையமான கல் ஒன்று உண்டு. நாட்டு வாழ்வின் சகல அம்சங்களையும் அவ்வாறு இணைக்கும் கல் நன்னடத்தையே. அது இல்லாவிடில் கமான் வளைவு இடிந்து விழவேண்டியதுதான். தனி மனிதர்களின் சீலத்தால்தான் நாட்டின் சீலம் உண்டாகும். அதுவே தேச சுபிட்சம் என்ற வளைவுக்கு மையக் கல்லாக விளங்க வேண்டும். மக்களின் நடத்தையை உயர்த்துவது நமது அரசியல், பொருளாதாரம், பாதுகாப்பு யாவற்றையும் உயர்த்துகிற உபாயம்.

அக்டோபர் இரண்டாம் தேதி காந்தி ஜயந்தி. காந்தியடிகள் அரசியலிலும் ஆன்மிகத்தை நிலைநாட்ட விரும்பினார் என்று அடிக்கடி சொல்வதுண்டு. இதற்குக் காரணம் அரசியல் வேறு அறநெறி வேறு என்று அவர் கருதாததுதான். தனிமனிதனின் நேர்மை என்ற நம்பகமான அஸ்திவாரத்தின் மீதே அவர் அரசியலை எழுப்ப விரும்பினார். வறண்ட பாலையாகிவிட்ட இந்நாட்டு அரசியலும் நிருவாகமும் மீண்டும் பசுமை கண்டு வளர வேண்டுமாயின் தூய நடத்தை என்ற பருவ மழை நாடு முழுதும் பொழிய வேண்டும். பருவ மழை என்பது பல தூறல்கள் ஒன்று சேர்ந்ததே. தனிமனிதர்களின் தூய்மை அவ்வளவும் சேர்ந்தே இந்தியப் பாலைவனத்தைச் சோலையாக்க முடியும்.

கடுமையாக உழைக்க வேண்டும், வியாபாரம் உள்பட எல்லாத் துறைகளிலும் நேர்மையாக இருக்க வேண்டும் என்ற விழிப்பு இந்திய மக்களுக்கு ஏற்பட வேண்டும். சீலம் என்பது சத்தியமும் மனத் தூய்மையும் மட்டுமல்ல. திறமையான உழைப்பும் அதில் அடங்கும். அரசியல், பொருளாதாரம், நிருவாகம், கல்வி, சுகாதாரம், மற்ற அனைத்துக்குமே தனிமனிதர்களின் சீலம் அவசியம். ஒரு தேசத்தை ஆக்குவதோ அழிப்பதோ அதில் உள்ள தனிமனிதர்கள்தான். ஒரு காலத்தில் சீலமுள்ளவர்களாக இருந்தோம். ஆனால் இப்போது நமக்கு என்னவோ வந்துவிட்டது. அது என்ன என்று ஆராய்ந்து பார்ப்பது சாத்தியமாயிருக்கலாம். ஆனால் இந்த ஆராய்ச்சி வெறும் கால விரயமே. மறுபடியும் விரைவில் நல்ல சீலங்களைப் பெறுவதே நாம் செய்ய வேண்டியது. அதன் பின் அரசியல், நிருவாகம், பொருளாதார நிலைமை எல்லாம் தானே சீராகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. நாம் ஹிந்துவோ, கிறிஸ்துவரோ, முஸ்லிமோ, பார்ஸியோ எம்மதத்தினராயினும், ஹிந்து மதத்திலேயே எப்பிரிவைச் சேர்ந்தவராயினும் நல்லவர்களாக இருக்க வேண்டுமென்பதும், கடுமையாக உழைப்பதில் ஆர்வம் கொள்ள வேண்டும் என்பதும் நம் அனைவருக்கும் பொது.

சுற்றிலும் விஷயங்கள் உருவாகும் விதத்தைப் பார்த்தால் அவநம்பிக்கையே தோன்றுகிறது. ஆனால் இந்த அவநம்பிக்கையை நம்பிக்கையால் வெல்ல வேண்டும். நம்பிக்கையுடனிருப்பதே நமது கடமை. ஆண்டவன் அருள் மழை பொழிந்தால் இந்த நம்பிக்கை பலன் தரும். மக்களின் நடத்தை நல்ல

முறையில் மாறும். உடலாலும் புத்தியாலும் செய்கிற கடும் உழைப்பினால் நல்ல அரசியலும் நல்ல நிருவாகமும் நல்ல பொருளாதாரமும் பிரவேசிப்பதற்குக் கமான் வளைவைக் கட்டலாம். கெட்டதை நல்லதாகவும், சோம்பேறித்தனத்தை உழைப்பாகவும் மாற்றும் போது தொடக்க காலத்தில் சில தியாகங்களைச் செய்வது போன்ற உணர்வு ஏற்படும். செங்குத்தான மலைப் பாதையில் செல்வது போல சிரமமாயிருக்கும். ஆனால் விரைவிலேயே நம்முள் ஒரு மகிழ்ச்சி பொங்கும். இதனால், செய்கிற காரியம் சுலபமாவது மட்டுமின்றி இனியதாகவும் மாறும். அது நமக்கு ஒரு நிறைவையும் தரும். எல்லா மதத்தையும் சேர்ந்த அடியார்கள் இதையே அவ்வப்போது தோன்றி உணர்த்தி வந்தனர். ஆனால் இக்காரியம் மிகவும் கடினமாயுள்ள இன்று நமக்கு மிகவும் தேவைப்படும் அந்த ஆன்ம சக்தி வாய்ந்த மகான்கள் மிகவும் குறைந்து போய்விட்டனர்.

'மக்கள் யாவரும் பரம்பொருளின் தோற்றங்களே; அவர்களுக்கும் ஆண்டவனுக்குமிடையே மாயத் திரை ஒன்றே உள்ளது' என்று மகானாகிய சங்கராசாரியார் கூறினார். இது ஒரு மகத்தான சக்தி வாய்ந்த சித்தாந்தம். இதை மக்கள் சரியான முறையில் புரிந்து கொண்டால் சுயநலம் யாவும் விலகிப் பலம் பெறுவார்கள். ஆனால் இச் சித்தாந்தம் விரைவிலேயே வாழ்முறையாக இன்றி, வெறும் அறிவு வாதத்துக்கு உரிய விஷயமாகி விட்டது. வாழ்க்கைக்கு உதவாமல், ஆராய்ச்சிப் பொருளானதும் அத்வைதத்தின் ஜீவசக்தி போய்விட்டது. அன்றாட வாழ்க்கைக்கு உதவியாக மக்களைக் காரியத்தில் ஈடுபடுத்தும் அத்வைதம் ஈச உபநிஷத்தின் 6, 7 மந்திரங்களில் அடங்கியுள்ளது:

> எவன் எல்லா வஸ்துக்களையும் தனக்குள்ளேயே இருப்பதாகப் பார்க்கிறானோ, எவன் தன்னை எல்லா வஸ்துக்களிடத்தும் இருப்பதாகப் பார்க்கிறானோ அவனுக்கு எதனிடமும் வெறுப்பு இல்லை.
>
> இம்மாதிரி எல்லாவற்றையும் தானாகக் காண ஒருவன் பழகிக் கொண்டு விட்ட பின் மோகத்துக்கும் சோகத்துக்கும் இடமேது?

நாம் மற்ற ஆன்மாக்களோடு இப்படி ஓர் ஒற்றுமை அடைந்த பின் துக்கம் தானாகவே நசித்துவிடும்.

உபநிஷத காலத்துக்குப் பிறகு பக்தி மார்க்கத்தைக் காட்டிய புனித ஆசாரியர்கள் தோன்றினர். நம் நாட்டில் மட்டுமின்றி, ஹிப்ரு, கிறிஸ்துவ, இஸ்லாமிய மதங்களிலும் தோன்றினர். மக்கள் எல்லோரும் சகோதரர்கள்; அவர்கள் அனைவருக்கும் பிதா ஆண்டவன்; அவன் நமது அன்புக்கும் விசுவாசத்துக்கும் காத்துக் கொண்டிருக்கிறான் என்று அவர்கள் உபதேசித்தனர். ஆண்டவன் மக்களின் இதயத்திலேயே இடம் கொண்டு அன்பையும் சத்தியத்தையும் ரகசியமாக மொழிகிறான் என்று அவர்கள் கூறினர்.

ஆண்டவனின் இந்தக் குரலை வேறு பெயர்களிலும் சொல்வார்கள். இந்திய மொழிகளில் மனச்சாட்சி என்பது இதைத் தான். இக்குரலைக் கேட்டு இதனிடம் சரண் புக வேண்டுமென பக்திமான்கள் உபதேசித்தனர். இவர்கள் உண்மையான கர்ம மார்க்கத்தையும் போதித்தனர். ஆண்டவன் வாக்காகவே இதை கீதை பின்வருமாறு சொல்கிறது: ''என்னிடத்திலேயே சித்தத்தை வைத்துப் பணி செய். அப்பணியை எனக்கே அர்ப்பணம் செய். அதன் பலன்களில் நீ சார்ந்திராமல் என்வசமாக்கிவிடு. வேலை செய்யும் போது என்னையே மனத்தில் கொள்வாய். இவ்விதம் செய்தால் என் அருளால் எல்லாத் தடங்கல்களையும் சிரமங்களையும் தாண்டி விடுவாய்.''

ஈசுவரன் என்றும், அல்லா என்றும், யஹோவா என்றும் வேறு பல பெயர்களிலும் அழைக்கப்படும் அவனிடம் பிரார்த்தித்து, எல்லாக் காரியங்களையும் அவனுக்குச் சமர்ப்பணம் செய்வதே உலகத்தின் எல்லா மெய்யடியார்களும் போதித்த வழி. இன்று நாசகரமான ஆயுதங்களில் உலக நாடுகள் போட்டியிடும் போதும், இதன் மத்தியில் மக்களுக்கு ஆன்ம சக்தி என்ற ஆயுதத்தைத் தந்து பலம் ஊட்டுவதற்காக ஓர் இயக்கம் நடந்து வருகிறது. மனத்தைத் தூயதாக்கி, எல்லாச் செயல்களையும் நேர்மைப்படுத்துவதன் வழியே ஆன்ம பலம் ஊட்டுவது இவ்வியக்கம். நன்னெறிகள் என்ற கவசத்தை மக்களுக்கு மீண்டும் பூட்ட விரும்பும் இவ்வியக்கத்துக்கு 'மாரல் ரீ—ஆர்மமெண்ட்' என்று பெயர். காந்தியடிகளின் பேரனும், என்னுடைய பேரனுமான ராஜ்மோஹன் காந்தி இவ்வியக்கத்துக்குப் பொறுப்பேற்றிருக்கிறார். ஐம்பது கோடி மக்கள் கொண்ட பாரதம் என்ற பெரும்பலசாலியை உறக்கத்திலிருந்து எழுப்பி, உழைப்பிலும் உண்மையிலும் ஈடுபடுத்துவதற்கு ராஜ்மோகன் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார். எல்லா நாடுகளுக்கும் பொதுவான ஆண்டவன் இப்பணிக்கு ஆசி அளிப்பானாக! ராஜ்மோஹன் வெற்றிபெற்றால், இந்தியா அதனுடைய பொருளாதாரத்திலும் அரசியலிலும் உள்ள குழப்பங்களைக் கடந்து, தேசிய வாழ்வில் புரையோடிவிட்ட ஒழுங்கீனத்தையும் கடந்து ஜயசாலியாக விளங்கும். சிக்கல்களும் ஒழுங்கீனமும் சூரியன் முன் பனி போல் மறைந்தே போகும்.

'மாரல் ரீ-ஆர்மமெண்ட்' இயக்கம் தன்னுடைய பெயரையும், புகழையும் தனது இலட்சியத்துக்கு மேலாகக் கருதாமலிருக்க வேண்டும். இது எல்லா இயக்கங்களுக்கும் ஏற்படும் ஓர் ஆபத்து. அவை தனி ஸ்தாபனமாகப் பெயரெடுக்க முற்பட்டாலோ, உலகாயத மக்களின் ஆதரவில் நடத்தப் பெற்றாலோ இந்த ஆபத்து ஏற்படத்தான் செய்யும். தரும மறுமலர்ச்சிக்காகவுள்ள இயக்கம் ஒரு ஜாதியோ கட்சியோ அல்ல. அது மக்களை நல்வழிப்படுத்தும் ஒரு பொது இயக்கம். அதைப் பற்றி அரசியல்வாதிகளும், சமயத் தலைவர்களும் எவ்வித ஐயமும் கொள்ள இடம் தரலாகாது. இப்படி ஐயம் கொள்வதாலேயே அது தனி ஜாதியாகிவிடும். ராஜ்மோஹன் காந்தியை உலகம் மறந்துவிடலாம். ஆனால் அவரது பணி வெற்றி பெற்றால் இந்தியா எழுச்சி பெறும்; சிந்தனை—சொல் — செயல் யாவற்றிலும் உலகமும் தூய்மை பெற்றுக் கடுமையாக உழைக்கவும் சமாதானத்தை ஏற்படுத்தவும் உதவும்.

— ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது

# வறட்சி போச்சு; வெள்ளம் வந்தது!

சென்ற ஆண்டு நாட்டில் மழையின்மையால் பெரும் இன்னல் ஏற்பட்டது. நாடு முழுவதிலும் உணவு நெருக்கடி உண்டாயிற்று. குறிப்பாக பிகாரில் பயங்கரப் பஞ்சம் தலைவிரித்தாடியது. வானம் கண் திறக்க வேண்டும் என நாடு முழுதும் பிரார்த்தித்தது.

வானம் கண் திறந்தது. துரதிர்ஷ்டவசமாகத் தேவைக்கு அதிகமாகவே கண் திறந்து விட்டது. விளைவு? அநாவிருஷ்டி போய் அதிவிருஷ்டி என்ற கொடுமை ஏற்பட்டுள்ளது. இதனால் இந்த ஆண்டு தேசமெங்கிலும் பல ஆறுகள் உடைத்துக் கொண்டு வெள்ளங்கள் ஏற்பட்டுள்ளன. கங்கை, கோதாவரி, யமுனை போன்ற பெருநதிகள் பல இடங்களில் 'ஆபத்து மட்ட'த்துக்கு அதிகமாக உயர்ந்திருக்கின்றன. வறட்சியில் முதலிடம் பெற்ற பிகாரிலேயே வெள்ளக் கஷ்டமும் உக்கிரமாக ஏற்பட்டுள்ளது. கஷ்ட நிவாரணப் பணிகளும் நடைபெற்று வருகின்றன.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்ய வேண்டியதன் அவசியத்தைச் சொல்ல வேண்டியதே இல்லை. அது நம் கடமை. பிரதமரும் மற்றத் தலைவர்களும் இக்கடமையில் நம்மை ஊக்கி வேண்டுகோள் விடுத்துள்ளனர். அதற்கு நாம் செவி சாய்த்து, இறைவனிடம் நம் பிரார்த்தனைகளை அளித்தால் அவனும் செவிசாய்ப்பான்.

# பிரதமரும் தி. மு. க.வும்

பெருந்தன்மை என்பதை அரசியல்வாதிகளிடம் கண்டு விட்டால் நமக்கு உண்டாகும் நிறைவே தனியானது. திரு அண்ணாதுரை அவர்கள் மாற்றுக் கட்சிக்காரர் விஷயத்திலும் பெருந்தன்மையைக் காட்டுவதாலேயே சிறப்பான பாராட்டுப் பெற்றிருக்கிறார். தி. மு. க. விஷயமாகப் பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்களும் இப்பெருந்தன்மையைக் காட்டியுள்ளார். மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

ஈழத்துக்குச் சென்றிருந்த ஸ்ரீமதி இந்திராவிடம் தி. மு. க.வைப் பற்றிப் பலர் பல சந்தேகங்களைக் கிளப்பிக் கேள்வி கேட்டனர். பர்மா, சிங்கப்பூர், மலேசியா, ஈழம் முதலிய இடங்களில் தி. மு. க. கிளைகள் தோன்றியிருப்பதைக் கண்டு அந்நாட்டவர் பிரிவினை சக்திகள் வலுப்பதாகவே பொதுவில் ஐயம் கொண்டுள்ளனர். இதையொட்டித்தான் பிரதமரிடம் வினா எழுப்பப்பட்டது. அப்போது அவர் தி. மு. க. தனது இந்தியப் பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டு விட்டது என்பதைத் தெளிவாக எடுத்துச் சொல்லி அவர்களது சந்தேகத்தை நீக்கியுள்ளார். மாற்றாரிடமுள்ள நல்ல அம்சங்களைப் புரிந்து கொண்டு, எடுத்துச் சொல்லும் பண்பு அவருக்கு மேன்மேலும் வளருமாக !

காமகோடியின் கருணைமொழி



ஒரு மாமரத்தில் நிறையப் பழங்கள் பழுக்கின்றன; விதைகள் உண்டாகின்றன. நன்றாகக் காய்க்கிற ஒரு மாமரத்தில் முந்நூறு நானூறு மாங்கொட்டைகள் உண்டாகின்றன. அவை உண்டாவதற்குக் காரணம் மீண்டும் மரம் உண்டாக வேண்டும் என்பதுதான். ஆனால் அத்தனை கொட்டைகளும் மரமாகி விடுகின்றனவா ? அப்படி ஆனால் உலகில் வேறெதற்கும் இடமே இராது. ஒரு கொட்டை முளைத்து நல்ல மரம் ஒன்று உண்டானால் போதும். மற்றவை அத்தனையும் வீணாகப் போனாலும் பரவாயில்லை.

அப்படித்தான் நாம் இவ்வளவு பேரும் வீணாகப் போய்விட்டாலும் குற்றம் இல்லை. நம்மில் யாராவது ஒருவன் — ஒரே ஒருவன் — பூரணத்துவம் அடைந்தால் போதும். கோடி கோடி சரீரம் உண்டாவதற்குப் பயனாக அது ஒன்றே போதும். அந்த ஒன்றே நமக்கு எல்லாம் சக்தி. அந்த ஒரு சக்தியை சிருஷ்டி பண்ணுவதற்காகத்தான் இத்தனை காமம், இத்தனை துக்கம், இத்தனை வியாதிகள்.

உறியடி என்று ஓர் உற்சவம் உண்டு. அப்போது சறுக்கு மரத்தில் பத்து, இருபது பேர் ஏற வருகிறார்கள். எல்லாரும் ஏறிவிட முடியாது. பலரும் ஏறி ஏறிச் சறுக்கி விழுகிறார்கள். கடைசியில் ஒருவன் உச்சிக்கு ஏறிவிடுகிறான். அந்த ஒருவன் ஏறுவதற்குத்தான் இத்தனை பிரயாசை. பல பேர் சறுக்கி விழுந்தது அதற்காகத்தான். அப்படி, நம் இத்தனை பேரில் ஒருவன் பூரணத்துவம் அடைந்து விட்டால் போதும். இத்தனை மதம், இத்தனை கோயில், இத்தனை பிரசாரம் எல்லாவற்றுக்கும் அது ஒன்றே லட்சியம்.

ASP/LT-2D/67 TAM

# யார் சொன்னது லக்மே டால்கம் விலையுயர்ந்-தது என்று?

## தூவித் தூவி மகிழுங்கள் மேனிமுழுதும்!



தூவித் தூவி மகிழுங்கள் ஆசை தீர. மகரந்த மாரி பொழியட்டும் மெய்குளிர.

நாளெல்லாம் நேசக் கதை சொல்லும் நறுமணம். விரும்பிய மாத்திரத்தில் கைக் கெட்டும் விலைநயம். லக்மே டால்கம். உரிமை கொள்வீர்கள் உடலார.

உபயோகித்து மகிழ்ச்சிச் சுழலிலே திளைக்க 'லக்மே கரமான' நறுமணவகைகள் நான்கு: லேவெண்டர், நிர்வாண், வெட்டிவேர், சந்தனம்.




Lakmé

## லக்மே டால்கம்

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்தியாவுக்குத் தொடர்பு மொழி ஒன்றிருக்க வேண்டும்; அது ஹிந்தியாகத்தான் இருக்க முடியும் — என்கிறார் ஸ்ரீமதி இந்திரா அம்மை. ஹிந்தி பேசாதவர்களுக்கு வாக்குறுதி தந்த தமது தந்தையுடன் அவர் வாதாடுகிறாரா? ஹிந்தியைப் புகுத்துவதை எதிர்ப்பவர்களுக்கோ அதைத் தாமதப் படுத்த விரும்புபவர்களுக்கோ தந்தை வாக்குறுதி தந்தது தவறு என்று ஸ்ரீமதி இந்திராவின் எண்ணமா?

ஹிந்தியே மக்களின் மொழி என்பது ஹிந்தியரின் வாதம். ஹிந்தி பேசாத மக்களின் மொழி அதுவல்ல. இப்படிப்பட்ட மக்கள் வாழும் பகுதி கணிசமானது என்பதை மறந்து பேசுகிறார்கள். இப்பகுதியில் உள்ள அறிவாளிகளுக்கும் ஹிந்தி தெரியாது. (ஆனால் ஹிந்திப் பகுதியில் உள்ள அறிவாளிகளுக்கு ஆங்கிலம் தெரியும்). இந்தியாவின் பெரும் பகுதிகளிலுள்ள படித்தோர், படிக்காதோர் அனைவருக்கும் தெரியாத மொழியைத்தான் அகில இந்திய ஆட்சி மொழியாக்க முயலுகிறார்கள்.

❖❖❖

சமரஸம் செய்துகொள்வதில் நல்லவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. ஆனாலும் சமரஸம் என்பதே சில சமயத்தில் ஏமாற்றும் வேலையாகவும் ஆவதுண்டு. தன்னையே ஏமாற்றிக் கொள்வதற்கோ, அல்லது பிறரை ஏமாற்றும் கொடுமைக்கோ சமரஸம் என்பது கச்சாப் பொருளாகப் பயனாவதுண்டு. ஹிந்தி விஷயத்தில் சமரஸம் செய்து கொள்வது இப்படிப்பட்டதுதான்.

ஹிந்தி என்றோ ஒரு நாள் எதிர்காலத்தில் 'தொடர்பு மொழி'யாவதற்கு நாம் ஒப்புக்கொண்டு சமரஸமாகப் போனால், ஹிந்தியைப் புகுத்துவதை இப்போதே தொடங்கியாக வேண்டும். குறிப்பிட்ட ஒரு தேதியில் நிகழும் ஒரு சம்பவம் போல் ஏதோ ஒரு தினத்தில் திடீரென்று ஹிந்தியைத் தொடர்பு மொழியாக்கி விட முடியாது. எதிர்காலத்தில் ஹிந்தியை ஒப்புக்கொள்வதென்றால் அதற்கு இப்போதே வேலை தொடங்கியாக வேண்டும். இதைத்தான் ஸ்ரீ திரிகுண சேனும் மற்றவர்களும் சொல்கிறார்கள். எனவே, மரியாதைப் பண்பைக் காட்ட வேண்டும் என்பதற்காக 'எதிர் காலத்தில் ஹிந்தி வரட்டும்' என்று சமரஸம் செய்துகொண்டோமானால் இன்றிலிருந்தே குழியில் விழத் தயாராக வேண்டும். அல்லது தீரமாக, வெளிப்படையாக ஹிந்தி வேண்டவே வேண்டாம் என்று சொல்ல வேண்டும். கல்வி என்பதே மனிதர்களை எதிர்காலத்துக்குத் தயார் செய்வதுதான். எதிர்காலத்தில் ஹிந்தியை ஏற்போம் என்பவர்கள் இதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.



இலங்கைக்கு அண்மையில் விஜயம் செய்த பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அந்நாட்டுப் பிரதமர் ஸ்ரீ சேனநாயகாவுடன் இலங்கை இந்தியர் குறித்த ஒப்பந்தத்தைச் சுமுகமாக அமுல்படுத்துவது பற்றியும் மற்றப் பிரச்னைகள் பற்றியும் உரையாடினார். இலங்கைத் தமிழர் தலைவர் திரு தொண்டைமான் குடும்பத்தினருக்கு பேட்டியளித்து அளவளாவினார்.





# என்ன சேதி?

★ "கோர்ட்டுக்குப் போங்கள்"

★ ஹிந்திப் பட எதிர்ப்பு

★ கூவம் மணக்கப் போகிறது!

★ கலைக்குக் கௌரவம்

ஒப்பந்தம் செய்து கொண்டபடி குத்தகைதாரர்கள் அளப்பதில்லை என்று நிலச்சுவான்தார்கள் முறையிட்டால் மந்திரி திரு கோவிந்தசாமி 'கோர்ட்டுக்குப் போகலாமே' என்று சொல்லுகிறார். இதைக் கேட்கும் சிறு நிலச்சுவான்தார்கள் மனம் எவ்வளவு கசப்படையும் என்று சொல்லத் தேவையில்லை. நிலத்தைச் சாகுபடி செய்யும் குத்தகைதாரர்களுக்கு உரிமையைத் தானம் வழங்கிவிட்டுச் சும்மா இருங்கள் என்று மந்திரி சொல்வதாகத்தான் அவர்கள் பொருள் கொள்வார்கள். ஏனெனில் எத்தனை நிலச் சொந்தக்காரர்களால் கோர்ட்டுக்குப் போக முடியும்? அதற்கு எவ்வளவு செலவாகும்? அப்படிச் செலவழித்தாலும் விவகாரம் பைசலாக எவ்வளவு நீண்ட காலமாகும்? விவசாயிகள் கோர்ட்டு ஏறி இறங்கிக் கொண்டிருக்கையில் விவசாயத் தொழில் என்னவது?

விவசாயத் துறையாயினும் சரி, தொழில் துறையாயினும் சரி எங்கும் முதலும் உழைப்பும் இரண்டும் கூடினால்தான் கணிசமான முன்னேற்றம் காண முடியும் என்பது உலகெங்கிலும் நிருபணமாகி விட்டது. இந்த முற்போக்குக் கருத்தை நாட்டு மக்களிடையே பரப்பி எங்கும் அன்பும் பாசமும் வளர்க்கும் அரிய வாய்ப்பைத் தி. மு. க. அரசாங்கம் நழுவ விடாது என்று நம்புகிறோம்.

ஹிந்தி சினிமாவை ஆட்சேபிப்போருக்குத் திரு மு. கருணாநிதி தக்க சமயத்தில் நல்ல முறையில் வழிகாட்டி யிருப்பதைப் பாராட்டுகிறோம்.

தமிழ் நாட்டில் தயாராகும் ஹிந்திப் படங்களில், நம் தமிழகத்தைச் சேர்ந்த ஏராளமான தொழிலாளர்கள் வேலை வாய்ப்பைப் பெற்றுள்ளனர். சினிமாத் துறை தற்சமயம் நல்ல பொருளாதார நிலையில் இல்லை. ஏதோ ஓரளவு உயிரை வைத்துக் கொண்டிருக்கிறது என்றால் அதற்குக் காரணம், தமிழ் நாட்டில் தயாரிக்கப்படும் ஹிந்தி சினிமாப் படங்கள் வட நாட்டில் ஓடிக் கொண்டிருப்பதுதான். அதனால் இங்கு ஹிந்திப் படங்களுக்கு எதிராக நடவடிக்கை எடுத்தால், தமிழ் நாட்டில் தயாரித்து அனுப்பப்படும் ஹிந்திப் படங்களுக்கே வடநாட்டில் தடை ஏற்படலாம். இதை எடுத்துக் காட்டி மாணவர்களை ஹிந்திப் பட எதிர்ப்பு நடவடிக்கையைக் கைவிடுமாறு வேண்டிக்கொண்டிருக்கிறார் திரு கருணாநிதி. அவரது கோரிக்கையில் உள்ள பொருளை மாணவர்கள் உணருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

சென்னை நகரத்துக்குள்ளேயே ஓடும் கூவம் ஆற்றுக்கு விமோசனம் ஏற்பட்டுள்ளது. சென்ற ஜூன் மாத பட்ஜெட் அறிக்கையில் கூவம் ஆற்றைச் சுத்தப்படுத்தி அதன் கரைகளை அழகுபடுத்தப் போவதாக முதன் மந்திரி அறிவித்தார். அதற்கான முதல் கட்ட வேலைகளை இப்போதே தொடங்கத் தமிழக அரசு முன்வந்திருப்பது எல்லோருடைய பாராட்டுதல்களையும் பெற்றுள்ளது. அதைவிட, கூவம் ஆற்றைச் சீர்படுத்தும் திட்டத்தை முந்தைய சர்க்கார் வகுத்து வைத்திருந்தது என்றும், அதனை அமல்படுத்தும் பணியைத் தாங்கள் மேற்கொண்டிருப்பதாகவும் திரு கருணாநிதி அவர்கள் வெளிப்படக் கூறி யிருப்பது பாராட்டுக்குரியது. பிறருக்குச் சேரவேண்டிய பாராட்டைத் தமதாக்கிக் கொள்ள மந்திரி கருணாநிதி விரும்பவில்லை என்பதனைப் புலப்படுத்தி விட்டார். இச்சீரிய பண்பு மேலும் வளர்வதாக!

வடமொழிப் பேரறிஞரும், சென்னை சர்வகலாசாலையின் சம்ஸ்கிருதப் பேராசிரியருமான டாக்டர் வே. ராகவன் அவர்களுக்கு ஆஸ்திரியாவிலுள்ள 'நோபிள் ஆர்டர் ஆப் ஸெயின்ட் மார்டின்' என்ற புகழ்பெற்ற நிறுவனம் தங்கப் பதக்கம் வழங்கித் தன்னுடைய கௌரவ அங்கத்தினராகப் பதிவு செய்து கொண்டுள்ளது. கலை அல்லது ஸயன்ஸில் தலைசிறந்த பணியாற்றியவர்களுக்கே கிடைக்கும் இந்தக் கௌரவத்தைப் பெற்றுள்ள பேராசிரியர் அவர்களுக்கு நமது பாராட்டுகளையும் நல்வாழ்த்துக்களையும் அளிக்கிறோம்.



காத்யாயன மகரிஷியின் புதல்வியாக அவதரித்துக் காத்யாயனி என்று பெயர் கொண்ட பராசக்தியைப் பரமேசுவரன் மணந்துகொண்டு மாப்பிள்ளையாகக் காட்சி தரும் திருத்தலம் திருவீழிமிழலை. இங்கு இகபர நலன்களை அளிப்பதில் இணையற்ற ருத்ர திரிசதி லட்சார்ச்சனை நடைபெற்று வருகிறது. அர்ச்சனை யொன்றுக்கு ரூ. 5 வீதம் அனுப்பிவைத்து அருட் பிரசாதம் பெறலாம். தொகை அனுப்பிவைக்க வேண்டிய முகவரி: ஸ்ரீ டி. ஜி. சுப்பிரமணிய சாஸ்திரிகள், திருவீழிமிழலை போஸ்ட், நன்னிலம் தாலுகா, தஞ்சை மாவட்டம்.

சென்னை

காமதேனு, ஸ்ரீநிவாசா, மகாராஜா, சயானி

மற்றும் தென்னாடெங்கும்




# நினைவில் நின்றவள்

(முழுநீள நகைச்சுவைச் சித்திரம்)

திரைக்கதை, வசனம்
சோ
டைரக்ஷன்
V. சீனிவாசன்
தயாரிப்பு
V. ராமசாமி

SEMBI




"நாட்டின் ஒரு பகுதியிலுள்ள மக்களின் மொழியையும் பண்பாட்டையும் மற்றப் பகுதிகளில் உள்ள மக்கள் அறிந்து தெரிந்து புரிந்து கொள்ளும்போது மக்களிடையே ஒருமைப்பாட்டு உணர்ச்சி உண்டாகிறது. மற்ற மொழிக்காரர்களுக்குத் தமிழ் வகுப்பு நடத்தித் தென்னகத்தின் மொழியைத் தலை நகரிலே பரப்பி வருவதன் மூலம் இந்தப் பணிக்குத் தன் பங்கைச் செலுத்தி வரும் தில்லி தமிழ்ச்சங்கத்தைப் பாராட்டுகிறேன்." இவ்வாறு தில்லி தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு வெளியீடாகிய "சுடர்" மலரைப் பேராசிரியர் கல்கி நினைவாக வெளியிட்டு வைக்கையிலே கூறினார் மத்திய அமைச்சர் திரு கே. எஸ். இராமசாமி.

"தில்லித் தமிழ்ச் சங்கத்தார் ஆண்டு தோறும் ஒவ்வொரு தமிழ்ப் பெரியார் பெயரில் மலர் வெளியிட்டிருக்கிறார்கள். தமது எழுத்தின் மூலம் தேசப் பணியும், சமுதாயப் பணியும், இலக்கியப் பணியும் புரிந்து தமிழ் மக்களிடையே புதிய விழிப்பை ஏற்படுத்தியவர் கல்கி" என்று கூறினார்.

சங்கத் தலைவர் திரு கே. வி. வேங்கடாசலம், "வாரந்தோறும் நடைபெறும் தமிழ் இலக்கியத் தொடர்ச் சொற்பொழிவும் மற்ற மொழிக்காரர்களுக்கு நடத்தும் தமிழ் வகுப்பும் சங்கத்தின் பணிகளில் குறிப்பிடத் தக்கவை" என்றார். "இந்தப் பணிகளையும் இவை போன்ற வேறு தமிழ்ப் பணிகளையும் செய்வதற்கு இட நெருக்கடியே இங்கு பெரிய தடையாக இருப்பதால், சங்கத்துக்குச் சொந்தமாக ஒரு கட்டிடம் எழுப்பும் பணியிலே ஈடுபட்டிருக்கிறோம். இதற்குத் தமிழ் மக்கள் தங்களாலான எல்லா உதவிகளையும் செய்ய வேண்டும்" என்றும் அவர் கேட்டுக் கொண்டார். 'சுடர்' மலரை அறிமுகம் செய்து பேசிய திரு சாலை இளந்திரையன், "தனி மனிதராக வாழ்வைத் தொடங்கி, ஒரு பெரிய ஸ்தாபனமாக வளர்ந்தோங்கிய கல்கி, பலரை வளர்த்துவிட்ட பெருமைக்கு உரியவர்" என்றார்.

விழாவை யொட்டி, தில்லி தட்சிண பாரத நாடக சபையினர் "சம்பவாமி யுகே யுகே" என்னும் சோவின் நகைச்சுவை நாடகத்தை அற்புதமாக நடத்தினார்கள்.

# நூற்றாண்டு வைபவம்

நாடக மேதை சங்கரதாஸ் சுவாமிகளின் நூற்றாண்டு விழா செப்டெம்பர் 9, 10 இரண்டு நாட்களும் ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் அதிவிமரிசையாக நடைபெற்றது. சுவாமிகளுக்கு அஞ்சலி செலுத்தத் தமிழகத்தின் நாடக நடிகப் பெருமக்கள் வெளியூர்களிலிருந்தெல்லாம் வந்து குழுமியிருந்தனர். தொடக்க உரை வழங்கியவர் உயர் நீதிபதி திரு எம். அனந்தநாராயணன். திரு ம. பொ. சிவஞானம் எம். எல். ஏ., நூற்றாண்டு விழா மலரை வெளியிட்டார். கவிஞர் திரு எஸ். டி. சுந்தரம் சுவாமிகளின் "சதி அநசூயா" நாடக நூலை வெளியிட்டார். சுவாமிகளின் "பவளக்கொடி" நாடகத்தை மதுரை தமிழ்நாடு நாடக நடிகர் சங்கத்தார் சொந்தக் குரலில் பாடி நடித்தார்கள்.

திரு டி. கே. சண்முகத்தின் வரவேற்புரையுடன் நவரஸங்களைப் பற்றிய ரஸமான கவியரங்கு நடைபெற்றது.

நாடக ஆசிரியர் கந்தசாமி முதலியார் உருவப்படத்தைத் திறந்து வைத்தார் திரு எம். ஜி. ஆர்.

"கருத்துக்களை விளக்க நாடக மேடையைப் பயன்படுத்தி யிருக்கிறேன். கலையைப் பிரசாரத்துக்குப் பயன்படுத்துவதென்பதே ஒரு கலை. நமது நாட்டின் தேசியப் போராட்டக் காலத்திலே நாடகக் கலை தெரிந்தோ தெரியாமலோ பிரசாரக் கலையாகப் பயன்படுத்தப்பட்டது. நாடகக் கலையின் மூலம் புது சமுதாயம், மக்கள் மனத்தில் மாற்றம், தொழில் முன்னேற்றம், அரசியல் முன்னேற்றம் ஆகியவற்றுக்கான கருத்துக்களை எடுத்துக்கூறி நல்லதொரு மாற்றத்தை ஏற்படுத்த முடியும்....சினிமாப்பட அதிபர்கள் தாங்கள் வெளியிடும் ஒவ்வொரு படத்துக்கும் ரூபாய் ஐயாயிரம் வீதம் நாடகக் கலை வளர்ச்சிக்குக் கொடுத்து உதவ வேண்டும். படத் தயாரிப்பாளர்கள் ஒரு வருடத்தில் எவ்வளவு தொகையை நாடகக் கலை வளர்ச்சிக்குக் கொடுக்கிறார்களோ, அதே அளவு தொகையைத் தமிழக அரசு கொடுக்கத் தயாராக இருக்கிறது..." இப்படிக் கூறி நாடகக் கலைஞர்களை வியப்பில் ஆழ்த்தி விம்மிதமடையச் செய்தவர் நம் மதிப்புக்குரிய முதல் அமைச்சர் அண்ணா அவர்கள்.



திருவான்மியூரிலுள்ள கலாக்ஷேத்திரத்தின் இயக்குநர்களில் ஒருவரான ஸ்ரீ சங்கர மேனன் அவர்களின் மணிவிழாவையொட்டி அவருக்கு நம் அகம் கனிந்த நல்வாழ்த்துக்களை அளித்து, அவரது நெருங்கிய நண்பர் ஸ்ரீ கி. சந்திரசேகரனது கட்டுரையை வெளியிடுகிறோம். – ஆசிரியர்

# பண்பாடு பரிமளிக்கிறது !

கி. சந்திரசேகரன்

எத்தனையோ பேர்களை நாம் பார்க்கிறோம்; எத்தனையோ மனிதர்களுடன் பழகவும் வாய்ப்புக்கள் பெறுகிறோம். சிலர் சிறிது கால அளவிலேயே நம் உள்ளங்களில் தங்காமல் போய்விடுகிறார்கள். மற்றும் சிலர் சில காலம் பழகுவதற்குள் வெகு நாட்கள் தொடர்பு கொண்டாற்போல் நம் நினைவில் பதிந்து விடுகிறார்கள். இதற்கு, அவர்கள் அவர்களாயிருப்பது ஒன்றே காரணம் என்ற முடிவுக்குத்தான் வருவோம்.

நண்பர் ஸ்ரீ சங்கர மேனனை நினைக்கையில் அவருடைய மேன்மைகள் எவ்வளவோ தெரிகின்றன. ஆனால் அவர் அவராகவே இருப்பது தான் அவரிடம் சட்டென நாம் வைக்கும் மதிப்புக்குக் காரணமாயிருக்கலாம் என்று கடைசித் தீர்மானம் செய்வோம். பண்பாட்டின் சின்னம் இதைவிடவும் ஒருவரிடம் பரிமளிக்க முடியுமா என்று வியப்பு உண்டாகிறது.

கேரள தேசத்தின் தனிச் சிறப்பு இன்றும் அங்குள்ளவர்களில் பலருக்குப் பழைமையின் தொடர்பை அறவே விட்டு விலகாமலிருக்கத் தெரிந்திருப்பதுதான். அதிகாலை ஸ்நானமும், பிற்பாடு சரியான அநுஷ்டானங்களும் சுத்தமான வீட்டுப் புறங்களும், உணவு வழங்குவதிலும் அதிதிகளை ஓம்புதலிலும் தாராளமும் — மொத்தத்தில் குடும்பங்களில் வெளியாகும் அமைதியும் அன்பும் கேரளத்தின் பழம் சம்பிரதாயங்களாகும். குடும்பங்களுக்கு தனியாக வீட்டுப் பெயர் இருப்பதும் அவர்கள் தொன்று தொட்டு வரும் நாகரிகத்தை விடாதவர்கள் என்பதை ஊர்ஜிதப்படுத்தும். ஸ்ரீ சங்கர மேனனின் வீடு 'கரியொட்டுக்களத்தில்' என்ற பெயர் பூண்டது. அவர் தகப்பனார் சம்ஸ்கிருதப் பயிற்சியில் தேர்ந்தவர். மூன்று பிள்ளைகளில் சங்கரன் கடைக்குட்டி. ஆனால் சூடிகையான குழந்தை. நம்ப முடியாத சிறு வயதில் தனது பாட்டியின் மடியில் அமர்ந்து அவள் சொல்லிக் கொடுத்த மலையாள ராமாயண மகாபாரதக் கதைகளை வார்த்தை விடாமல் நூலில் உள்ளதைப் போலவே ஞாபகமாய்ச் சொல்லும். அத்திறமையைக் கண்ட தகப்பனருக்கும், மூத்த தமையனுக்கும் பெருமை இவ்வளவு அவ்வளவு என்பது இல்லையாம். படிப்பில் தேர்ச்சியுடன் அசாதாரணமாக மனப்பாடம் செய்யும் ஆற்றலும் உண்டு. இதனால் ஆங்கில சம்ஸ்கிருத மலையாள இலக்கியங்களிலிருந்து சதா அவருடைய நாவில் சுலோகங்களும் காவியத் துணுக்குகளும் மேற்கோள்களும்' வெள்ளமெனப் பொழிவதைக் கண்டவர்களுக்கு அவரிடம் சிறிது பொறாமையே ஏற்படுவது சகஜம்.



விஞ்ஞானத்தில் **Physiology and Marine Biology** என்ற ஆராய்ச்சித் துறையில் வெகுவாக ஊன்றியிருந்தவரை, மேலை நாடுகளுக்கு அனுப்பத் தயாராக இருந்த சமயம் அவர் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. பெஸண்ட் அம்மையார் இறப்பதற்கு முன் பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவி, தேசியக் கல்வி வளர்ச்சிக்கான அடிகோலிகளைத் தயாரிக்க ஆவலோடு இருந்தார். ஆனால் அவருடைய நெருங்கிய சீடரான ஜார்ஜ் அருண்டேல் என்பவரே அத்திட்டத்தை உருவாக்கி வெற்றி கண்டார். தலைமை உபாத்தியாயராக யாரை நியமிப்பதென்ற யோசனை பலமாயிருக்கையில், சூட்சுமமாய்ப் பிறர் தன்மையை அறியும் சக்தி பெற்றிருந்த அருண்டேல் அவர்கள், ஸ்ரீ சங்கர மேனனை எதிர்பாராத சமயம் கண்டு 'வாருங்கள் தலைமை ஆசிரியரே!' என்று அழைத்து வரவேற்புக் கொடுத்தார். அதை இன்று நினைக்கையில் ஆச்சரியமாயிருக்கிறது. அதற்கு முன் உபாத்தியாயருடைய தொழிலில் கொஞ்சமும் பிரவேசமற்ற ஒருவரைத் தலைமை ஸ்தானத்தில் வைத்தது ஆச்சரியமெனில், சங்கர மேனன் தாமே தமது யோக்கியதைகளில் சந்தேகங்கள் பெற்றிருந்தும், ஸ்ரீ அருண்டேல் சொன்னதைத் தட்டாமல் பதவி ஏற்பதில் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டது அதனினும் ஆச்சரியமாகும். ஏற்கனவே கல்வி கற்பிக்கும் முறையில் பயிலாததால், அருண்டேல் காட்டிய

முறைகளைக் கற்றுத் தனியான தலைமை ஆசிரியராக அவர் ஆனார் என்பதுதான் சங்கர மேனனுடைய தலைமை ஆசிரியப் பணியைப் பற்றிப் பல மாணாக்கர்கள் வாடாத நினைவு வைத்து இன்றும் போற்றுவதற்குக் காரணம்.

குழந்தைகளிடம் பரிவும், சிறுவர்களிடம் அனுதாபமும், பெற்றோர்களின் பொறுப்பில் ஒத்துழைப்புமே சங்கர மேனனை மற்றெவருக்கும் தோன்றாத விதம் நேர்மை நெறியுடன் கூடிய தலைமை ஆசிரியராக்கின. இன்றும் பார்க்கலாம், அவருடைய முகம் சட்டென மலருவதற்கு எதிரில் எங்காவது ஒரு குழந்தையோ இள வயதினரோ தென்படுவதுதான் காரணமாயிருக்கும். விஷமம் செய்யும் நிபெத்துக் குழந்தைகளைப் பெயர் சொல்லி அவர் வாஞ்சையுடன் அழைத்துக் கூறும் சொற்களைக் கூட இருந்து கவனித்தால் தெரியும், அவர் இன்று ஆசிரியர் பதவியிலிருக்காவிட்டாலும் சுபாவமாய் இளைஞர்களிடம் எவ்வளவு கவனமும் அக்கறையும் உள்ளவர் என்பது.

கலாக்ஷேத்திரத்தின் டைரக்டராய் வேலை தொடங்கியதற்குக் காரணம் பிறர் தூண்டுதல் அல்ல. ஒரு சமயம் ஸ்ரீமதி ருக்மிணி தேவி, வாழ்க்கையை வேறு வழியில் சிறப்பெய்தும்படி செய்துகொள்ள வசதி படைத்துள்ள ஸ்ரீ சங்கர மேனன் தம்முடைய தாட்சிண்யத்தின் பொருட்டே, தமக்கு உதவியளிப்பதில் முனைகிறாரோ என்ற கவலையுடன், ''உனக்கு வேறுவித வாழ்க்கையில் ருசி இருக்கும். ஆகையால் கலாக்ஷேத்திரத்திலேயே உழலுவானேன்?'' என்றார். அதற்கு அவர் கொடுத்த பதில் மிகவும் ஆச்சரியத்தை விளைவிக்கும். ''என்ன, நான் இங்கு தியாகம் செய்வது போலல்லவா உங்கள் பேச்சு இருக்கிறது? எனக்குப் பிடித்த வேலையைச் சுய நன்மைக்காக நான் செய்து வருவதில் அதிருப்தி யாருக்கு, எனக்கா, உங்களுக்கா?'' என்றாராம். ஸ்ரீமதி ருக்மிணியினிடம் தமது குருவான அருண்டேலின் மனைவியார் என்ற தீர்க்க மரியாதை கொண்டிருப்பதுடன், சொந்தத்தில் கலைகளுக்காக அவர் செய்யும் பல புதிய முயற்சிகளில் ஈடுபாடும் இருப்பதனாலேயே அவ்வளவு பொறுப்புக்களையும் அவர் தாங்கி வந்திருக்கிறார்.

சங்கீதம், பரத நாட்டியம், கதகளி இவைகளில் தோய்ந்த உள்ளம் அவருடையது. எவரையும் நிந்திக்காது, எவருடைய தவறுகளையும் நினையாமல் பழகும் பக்குவம் அவருக்கிருப்பதை நேரில் அனுபவித்தவர்கள் பலர் உண்டு. எதிரியே இல்லாதிருப்பதைக் காட்டிலும், எதிரி இருந்து அவரைத் தான் எதிரி என்றே கருதாது மற்றவர்களிடம் பழகுவது போல் நடந்து கொள்ளும் தன்மை வேறு எவரிடமும் இவ்வளவு அதிசயிக்கத்தக்க விதத்தில் காண முடியாது.

என்றைக்கும் சிரித்த வதனம். எதையும் மனச் சோர்வுக்கு உணவாக்காதவர். பிறர் சிரமத்தில் பங்கு கொள்வதைத் தூய்மையுடன் வரவேற்பவர். யாரையும் தெரிந்து கொள்வதில் அலாதியான சந்தோஷம்; சிலரை ஒதுக்குவது, சிலரை ஏற்பது, சிலரைக் கவனியாதிருப்பது, சிலரை அதிகம் உபசரிப்பது இவை போன்ற சேலமில்லாப் பழக்கங்களே அவரை அணுகா.

கலைகளை வளர்க்கும் பெரியவர்கள் வாழும் இடமானதால் கலா 'க்ஷேத்திரம்' என்றே நாமகரணம் செய்தார் ருக்மிணிதேவி. ஆனால் கலைஞர்களுக்கெல்லாம் நறுமணம் ஊட்டும் அரிய கலை, மனங்கோணாமல் அலுவல்களைச் செய்து, சிரமங்களையெல்லாம் தாங்கி, திருத்தமுடன் காரியங்களை நிர்வகித்து, எல்லாவற்றிற்கும் மேலாகத் தாம் செய்வதொன்றும் பெரிதல்ல என்ற மனப்பான்மையை வளர்ப்பதும் அல்லவா! இக்கலையைத் தாம் செயற்படும் முறையொன்றே சிறந்ததென்ற பிடிவாதம் நெருங்காமல் சங்கர மேனன் இவ்வளவு காலமாய்ச் செய்து வந்திருப்பதால் க்ஷேத்திரத்தின் மகிமை வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது.

இனி கலாக்ஷேத்திரத்தை அணுகுபவர்கள் ஸ்ரீ சங்கர மேனனின் இருப்பிடம் என்பதாலும், அதற்கு ஒரு சிறப்பு ஏற்பட்டிருப்பதை ஒப்புவார்கள். இதை விடவும் அறுபது ஆண்டின் நிறைவு ஒருவருக்குப் பெரிதா?



## காந்தி ஜயந்தி தினம்

கிண்டி ராஜபவனம் காந்தி மண்டபத்தில்
2-10-1967 திங்கட்கிழமை மாலை 4-30 மணிக்கு

### பிரார்த்தனைக் கூட்டம்

நாதஸ்வர இசை

○●○

**ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி**
துதிகீதங்கள் பாடுவார்

சாரதா வித்தியாலய போதனா முறை பயிற்சிப் பள்ளி மாணவிகள்,
தக்கர்பாபா வித்தியாலய மாணவர்களால் நூற்பு யக்ஞம்,
கீதை பாராயணம், ராமநாம பஜனை.

# யாரோ இவர் யாரோ ?



'சோ'

## அத்தியாயம் 9

எல்லோரும் உறங்கவிடவே, 'நகையைத் திருட இதுவே சரியான சந்தர்ப்பம்' என்று முடிவு செய்தான் எதிராஜ். அந்த முடிவை அறியாமல், பாவம், ராஜரத்தினம், கிரிஜா, முத்து மூவருமே நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தனர்.

''சிங்காரம், எல்லாரும் நல்லாத் தூங்கறாங்க. வா, நெக்லேஸைத் தேடுவோம்'' என்று சிங்காரத்தை அழைத்தான் எதிராஜ்.

''அண்ணே! அது எங்கேயோ ரகசியமான இடத்திலே இருக்குது. கொஞ்சம் நிதானமாகவே தேடுவோம்'' என்றான் சிங்காரம்.

''போடா முட்டாள்! கிடைச்ச சமயத்தை நழுவ விட்டுர்றதா? வாடா! மாடியிலே போய்ப் பார்ப்போம்'' என்று அவன் கையைப் பிடித்து இழுத்தான் எதிராஜ்.

'' மாடியிலேதான் இருக்குதுன்னு என்னண்ணே நிச்சயம்?'' என்று கேட்டான் சிங்காரம்.

''ரகசிய அறையிலேதான் அந்த நெக்லேஸ் இருக்கிறதாகச் சொன்னியே ?'' என்றான் எதிராஜ்.

''அப்படித்தான் சொல்லக்கிறாங்க.''

''சொல்லிக்கிறாங்கன்னு இன்னடா அர்த்தம்? உனக்கே சந்தேகமா இருக்குதா ?''

''சே! சே! என் வரைக்கும் நெக்லேஸ் இந்த வூட்டுலே எங்கேயோ இருக்குதுன்னு நம்பறேன். ஆனா நீ ஏன் மாடியிலே தேடலாம்னு சொல்றே? கீழே இருக்காதா?''

''உனக்கு மூளையே இல்லேடா சிங்காரம். நம்ம மாடிக்கெல்லாம் அடிக்கடி போக முடியுமோ, முடியாதோ தெரியலே. அதனாலே இப்ப சான்ஸ் கிடைச்சிருக்கிற போதே அங்கே தேடலாம்ன்றேன். கீழேன்னா எப்ப வேண்ணாலும் சந்தர்ப்பம் கிடைக்கும், தேடிக்கலாம்.''

''சரி, அண்ணே! உன் இஷ்டம். வா !'' என்று சிங்காரம் அழைக்க, எதிராஜூம் அவனுமாக மாடியேறிச் சென்று நகையைத் தேட ஆரம்பித்தார்கள்.

ஒரு மூலைமுடுக்கு விடாமல் தேடியும் ரகஸ்ய அறை எங்கே இருக்கிறது என்று கண்டு பிடிக்க முடியாமல் தவித்தான் எதிராஜ். ''சே! என்னதான் ரகசிய அறையாக இருந்தாலும் இவ்வளவு ரகசியமா !'' என்று நினைத்து அலுத்துக் கொண்டான். அசோக் வேறு நடுநடுவே வந்து இவர்களைப் பார்த்து உறுமிக் கொண்டு நின்றது. சிங்காரம் அதைக் கட்டிப் போடச் செய்த முயற்சிகளும் தோல்வி அடைய, பல முறை முயன்றும் ரகசிய அறையைக் கண்டு பிடிக்க ஒரு விதமான யோசனையும் தோன்றாமற் போக, 'இன்று இவ்வளவு போதும்' என்று முடிவு செய்தான் எதிராஜ்.

ஹாலிலேயே தூங்கிக் கொண்டிருந்த ராஜரத்தினம், கிரிஜா, முத்து மூவரும் ஒவ்வொருவராகத் தூக்கம் கலைந்து எழுந்திருக்க ஆரம்பித்தனர். முதலில் எழுந்தது கிரிஜாதான். தான் ஏன் இந்த நேரத்தில் இப்படித் தூங்கி விட்டோம் என்று அவள் சிந்திப்பதற்குள், தன் தந்தையும், முத்துவும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து வியப்படைந்தாள். இதற்குள் ராஜரத்தினத்துக்கும் விழிப்பு வந்து விட்டது.

முகத்தில் அசடு வழிய கிரிஜாவைப் பார்த்து, ''நல்லாத் தூங்கிட்டேன் இல்லே? ஹி....ஹி....! என்னமோ தெரியலே. திடீர்னு கண்ணை இழுத்துக்கிட்டே தூக்கம் வந்திரிச்சு !'' என்றார்.

''என்னமோ தெரியலேப்பா! நானும் நல்லாத் தூங்கிட்டேன். இப்பத்தான் முழிச்சுக்கிட்டேன். ஏன்? டாக்டரைப்

பாருங்க — அவரும் கூட நல்லாத் தூங் கறுரே!'' என்ருள் கிரிஜா.

டாக்டர் மேகநாதனை — அதாவது முத்துவைத் திரும்பிப் பார்த்தார் ராஜரத்தினம். ''என்ன இது? இன் னிக்கு எல்லாரும் இப்படித் தூங்க ரேும்?'' என்று கேட்டுக் கொண்டிருக் கும் போது எதிராஜும், சிங்காரமும் அசோக் பின்தொடர மாடியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தனர்.

வியப்போடு அவர்களைப் பார்த்து, ''நீங்க தூங்கலையா?'' என்று கேட்டார் ராஜரத்தினம்.

''இல்லையே! நீங்கள்ளாம் தூங்கிட் டீங்க. சிங்காரம் எனக்கு வீட்டைச் சுத்திக் காமிச்சுக்கிட்டிருந்தான்; பார்த் துக்கிட்டிருந்தேன்'' என்ருன் எதிராஜ். இதற்குள் முத்துவின் தூக்கமும் ஒரு வழியாகக் கலைந்தது. சுற்றி எல்லோரும் பேசிக்கொண் டிருப்பதைப் பார்த்துப் 'பேந்தப் பேந்த' விழித்தான்.

''என்ன டாக்டர், நீங்ககூடத் தூங்கிட்டீங்க?'' என்ருள் கிரிஜா.

''ஏன்? டாக்டரா இருந்தாத் தூங்கக் கூடாதா?''

ராஜரத்தினம் முத்துவிடம், ''ஆமாம், டாக்டர்! அப்புறம் அசோக் மருந்தைக் குடிச்சாரே?'' என்று கேட்டார்.

''அது எங்கே குடிச்சுது? அது முழிச்சுக்கிட் டிருக்கிறதைப் பார்த் தாலே தெரியலே? கடைசியிலே உங் களை மாதிரி நானும் மருந்தைக் குடிச் சுட்டுத் தூங்கிட்டேன்'' என்ருன் முத்து.

''அப்போ தூக்கத்துக்குக் கார ணம் அந்த மருந்துதானு?'' என்ருள் கிரிஜா.

''ஆமாம்''

''அட கடவுளே! அது வைட்டமின் மாத்திரை, யார் வேணுமின்னுலும் சாப்பிடலாம்னு சொன்னீங்களே.''



''ஆமாம்! அது வைட்டமின்தான். இருந்தாலும் அதைச் சாப்பிட்டாக் கொஞ்சம் தூக்கம் வரும்.''

''ஏன்! அது தூக்க மாத்திரையா?''

''அப்படிச் சொல்ல முடியாது. அது ஒரு மாதிரி மாத்திரை.....'' என்று இழுத்தான் முத்து.

ராஜரத்தினம் குறுக்கிட்டார்: ''இதெல்லாம் நமக்குப் புரியும்படியா சொல்றதுக்கு டாக்டராலே முடியுமா? இல்லே, அவர் சொன்னாதான் நமக்குப் புரியப் போறதா? ஏதோ மொத்தத்திலே நாய் சாப்பிட்டா வைட்டமின், நாம சாப்பிட்டா தூக்க மாத்திரை!''

கிரிஜா முத்துவிடம், ''டாக்டர், நீங்க இங்கேயேதானே தங்கப் போறீங்க?'' என்று கேட்டாள்.

''எனக்கே என்ன செய்யறதுன்னு புரியலே.''

''ஏன்?''

''என் அஸிஸ்டென்ட் எதிராஜையும் 'கன்ஸல்ட்' பண்ணிக்கிட்டுச் சொல்றேன்'' என்று கூறி முத்து பரிதாபமாக எதிராஜைப் பார்த்தான்.

''உங்க இஷ்டம், டாக்டர்'' என்று ஆரம்பித்த எதிராஜ், ''ஆனா நான் இங்கேயே இருந்தா அசோக்கைக் கவனிச்சுக்கச் சௌகரியமா இருக்கும்'' என்று கூறி முடித்தான். அப்படிச் சொல்லும் போது அவன் கண்களின் தீட்சண்யமான பார்வை முத்துவை ஊடுருவிச் சென்றது, 'சொன்னதையெல்லாம் மறந்தால் — நீ தொலைந்தாய்' என்று எச்சரிப்பது போல.

பிறகு முத்து யோசிக்கவே இல்லை. ராஜரத்தினத்திடம், ''ஸார், எதிராஜ் சொல்றதுதான் சரி. அவன் இங்கேயே இருக்கட்டும். அதான் அவனுக்குச் சௌகரியமா இருக்கும்'' என்று கூறிவிட்டான்.

கிரிஜா உடனே, ''நீங்க இங்கே இல்லேயென்றால் வேறு எங்கே தங்கப் போறீங்க, டாக்டர்?'' என்றுகேட்டாள்.

''என் சிநேகிதன் ஒருத்தன் இருக்கிறான். அவன் கூடத் தங்கிக்கறேன்'' என்று கூறிவிட்டு முத்து எதிராஜைப் பார்த்தான், 'சரிதானே!' என்றுகேட்கும் முறையில். எதிராஜும், 'அதனுல்



தவறில்லே' என்ற முறையில் தலையை அசைத்தான்.

ராஜரத்தினம், ''ஏன் டாக்டர்? என்ன இது? எதுக்கெடுத்தாலும் அஸிஸ்டெண்ட்கிட்டே கேட்கிறீங்க?'' என்று முத்துவைப் பார்த்தார்.

''மத்த அஸிஸ்டெண்ட் மாதிரியெல்லாம் இல்லே ஸார் இவன். வைத்தியத்தைப் பத்தி எனக்கு எவ்வளவு தெரியுமோ, அவ்வளவு இவனுக்கும் தெரியும்.''

''ஓஹோ! ஆமாம், இவர் உங்ககிட்டே ரொம்ப நாளாவே அஸிஸ்டெண்ட்டா இருக்காரா?''

''இல்லேயே. இன்னிக்குத்தான் சேர்ந்தான்.''

''இன்னிக்கா?'' ராஜரத்தினம் ஆச்சரியப்பட்டார்.

''அதாவது வந்து.... அவன் எங்கிட்டே சேர்ந்தது இன்னிக்கு நடந்த மாதிரிதான் இருக்குது. அவ்வளவு நல்லா நினைவு இருக்குது. நேரே வந்தான். 'டாக்டர்! இனிமே நான்தான் உங்க அஸிஸ்டெண்ட்' அப்படின்னுன். அவன் சொன்னதுக்கு ஒத்துக்கிட்டு அப்ப தலையாட்டினேன். அதிலேருந்து அவன் சொல்றதுக்கெல்லாம் தலையாட்டிக்கிட்டிருக்கிறேன்'' என்று தன் நிலையை விளக்கினுன் முத்து.

''எதிராஜைப் பார்த்தால் தங்கமானவராத்தான் தெரியுது'' என்ருர் ராஜரத்தினம்.

''ஆமாம், ஸார்!'' என்று ஆமோதித்தான் முத்து. ''அவன் மனசு தங்கம். அவன் எண்ணம் வைரம். அவன் பார்வை ரத்தினம். அவன் மூச்சு வைடூரியம். அவன் நடை கோமேதகம். ஆக மொத்தம் அவன் ஒரு ரெடிமேட் நெக்லேஸ் மாதிரி.''

''டாக்டர் என்னைப் பத்தி ரொம்ப அநாவசியமாப் புகழுருரு'' என்ருன் எதிராஜ். அது அவனுடைய தன்னடக்கம் என்று எண்ணினுர் ராஜரத்தினம். ஆனல் 'அநாவசியமா' என்ற வார்த்தையில் எதிராஜ் கொடுத்த அழுத்தம் முத்துவுக்குப் புரிந்தது. 'இதோடு நிறுத்திக் கொள்' என்ற எச்சரிக்கையே அது.

முத்து, ''அப்போ நான் வரேன் ஸார்'' என்று புறப்பட்டான்.

''திரும்பி எப்போ ஸார் வர்றீங்க?' என்று கேட்டாள் கிரிஜா.

''நாளேக்கு வருவார்'' என்ருன் எதிராஜ்.

''நாளேக்கே வரேன்'' என்று கூறி விடைபெற்ருன் முத்து.

முத்துவின் நடையழகை ரசித்தபடியே கிரிஜா நிற்க, எதிராஜ் முத்துவோடு வாயிலுக்குச் சென்ருன்.

''இதோ பாரு முத்து.... நான் யாரு என்னன்ற விஷயத்தைப் பத்தி யார் கிட்டயாவது பேசினே, தொலேச்சுப்புடுவேன். நினைவிலே வைச்சுக்க'' என்று முத்துவை எச்சரித்து அனுப்பிவிட்டு எதிராஜ் உள்ளே சென்ருன்.

'இந்த விஷயங்களே யெல்லாம் உடனே ரவியிடம் சொல்லிவிட வேண்டும். அவன் தான் இந்தக் குழப்பத்தைத் தீர்க்க வழி காட்டுவான்' என்று மனத்துக்குள் தீர்மானித்துக் கொண்டு ரவியின் வீட்டை நோக்கி விரைந்தான் முத்து.

அவன் வீட்டை அடைந்த போது ரவி அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

உள்ளே வந்த முத்துவைப் பார்த்தவுடன் ரவியின் முகம் மாறியது. மகிழ்ச்சி பொங்க, ''என்னடா, டாக்டர் மேகநாதன்! போன காரியம் எப்படி? எல்லாரையும் ஏமாத்திட்டியா?'' என்ருன்.

''எல்லாரையும் ஏமாத்தினேன். நானும் ஏமாந்தேன்'' என்று முத்து ராஜரத்தினம் வீட்டில் நடந்தவை அனேத்தையும் கூறி முடித்தான்.

''யார்ரா இந்த எதிராஜ்?'' என்று கேட்டான் ரவி.

''என்னுடைய அஸிஸ்டெண்ட் டாக்டர்!'' என்ருன் முத்து.

''கிடக்கட்டும். என்னதான் சொல்ருன் அவன்?''

''நான் ஏதாவது சொன்னுத் தொலேச்சுப்புடுவேன்னுன்!''

''அவனேப் பத்திப் போலீஸ்லே புகார் கொடுத்திட்டா என்னன்னு யோசிக்கிறேன்!''

''வேண்டாண்டா! அவன் என்னேத் தொலேச்சுப்புடுவான். டாக்டர் வேஷம் போட்டதுக்காகப் போலீஸ்லே மாட்டிக் கொடுத்துடுவான். ரவி, நீ எனக்குச் செஞ்சதெல்லாம் போதாதா? இது வேறே எதுக்குடா? சத்தியமாச் சொல்றேன். நான் நன்றி மறக்காதவன். நீ செஞ்சதெல்லாம் மறக்க மாட்டேன். இதுவே போதும். இதுக்கு மேல் வேண்டாம்'' என்று அழமாட்டாக் குறையாகக் கூறினுன் முத்து.

''ஏண்டா, இப்படி நடுங்கறே? அவனுலே உன்னே என்ன செய்ய முடியும்?''

''போலீஸ்லே மாட்டி விட்டுடுவான்.''

''அவனும் மாட்டிப்பானே.''

''நாங்க ரெண்டுபேரும் போலீஸ்லே மாட்டிக்கிருேம். நீ நிம்மதியா இரு. எதிராஜுக்குப் போலீஸ் சொந்த வீடு மாதிரி. நான் மாட்டிக்கிட்டா அவ





**''உங்க அப்பா எனக்கு ஸ்கூட்டர் வேணுமா, டேப் ரிகார்டர் வேணுமான்னு உன்னைக் கேட்கச் சொன்னாராமே! நீ ஏன் என்னிடம் கேட்கலை?''**

**''நீங்கதான் உங்களை நான் ஒண்ணுமே கேட்கப்படாதுன்னு சொல்லியிருந்தேளே! அதனால்தான் இதையும் கேட்கலை!''**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மானம் இல்லையா? எங்கப்பா என்னைத் தொலைச்சுப்புடுவாரு.''

''எதிராஜும் தான் தொலைச்சுப்புடுவான்றே. ஏன் இப்படியெல்லாம் இவங்க உன்னைத் தொலைச்சுக் கட்டறதிலேயே கண்ணா இருக்காங்க?''

''ரவி நடந்ததைச் சொல்லிட்டேன். நீதான் இதுக்கெல்லாம் ஒரு வழி செய்யணும். நான் பேசாம இனிமே ராஜரத்தினம் வீட்டுக்குப் போகாம இருந்துரட்டுமா? எங்க ஊருக்கே திரும்பிப் போயிடட்டுமா?''

''முட்டாள்! முன் வெச்ச காலைப் பின் வெக்கலாமாடா?''

''முன் வெச்ச காலைச் சேத்துலே வெச்சுருக்கோம்னு தெரிஞ்சா, பின்னாலே எடுத்து வெச்சுடறதுதான்டா புத்திசாலித்தனம்.''

''சேறு இருக்கிறதையும் தார் ரோடு மாதிரி செய்துடலாம், கவலைப் படாதே!''

''நீ ரோடு போடற லட்சணத்தைத்தான் பார்த்துட்டேனே. கார்ப்பரேஷன் ரோடு எவ்வளவோ தேவலை.''

''டேய், முத்து! நீ பயந்து அங்கே போகாம இருந்துட்டா என்ன நடக்கும்னு கொஞ்சம் யோசிச்சுப் பாரு. அப்புறம் கிரிஜா உனக்குக் கிடைக்கவே மாட்டா.''

''அது அவ செஞ்ச புண்ணியம்'' என்று கூறிய முத்துவின் கண்களில் நீர் தளும்பியது. ''ரவி, கிரிஜாவைக் கல்யாணம் செய்துக்காட்டி நான் சந்நியாசியாப் போயிடுவேன்.....'' என்றான்.

''கையிலே கமண்டலம் ஏந்திக் காவியுடை அணிந்து, சிகை முடி நீண்டு தரையிலே புரள, 'ஓம்! ஓம்!' என்று ஜபித்துக் கொண்டு நீ சுற்றியலைய விரும்புகிறாயா? உன்னை அந்தக் கோலத்தில் பார்த்து, வாழ்க்கையையே வெறுத்துக் கிரிஜாவும் மரவுரி தரித்து உன்பின் வந்து விட்டால் என்ன செய்வாய்?'' என்று உணர்ச்சி ததும்பப் பேசினான் ரவி.

''அப்ப அவளை உடனே கலியாணம் செய்துக்கிடுவேன்.''

''சந்நியாசிக் கல்யாணமா? — அது இருக்கட்டும். இப்ப ஒரு திருடனைக் கிரிஜா வீட்டுலே நீதான் நுழைய விட்டிருக்கிறே. அவங்க வீட்டு நெக்லெஸ் திருட்டுப் போனா அதுக்கு நீதான் காரணம். இனிமே நீ அங்கே போகாட்டி எதிராஜுக்கு நல்ல சௌகரியம். திருடனுக்கு உதவிசெய்யறது சரின்னு பட்டால் தாராளமாச் செய். நான் குறுக்கே நிக்கலை. ஆனா, எப்படியாவது அவன் நெக்லேஸைத் திருடாம பார்த்துக்க வேண்டியது உன் பொறுப்பு. அதுக்கு நீ தினம் அங்கே போயிட்டுவரதுதான் நியாயம்'' என்று ரவி ஒரு பிரசங்கமே செய்து முடித்தான்.

''எனக்கு என்ன செய்யறதுன்னே தெரியலை ரவி. ஏதோ நீ இருக்கிற தைரியத்துலேதான் நான் திரும்பி அவங்க வீட்டுக்குப் போகணும்.''

''பயப்படாதே. தைரியமாப் போ. நானிருக்கப் பயமேன்?'' என்றான் ரவி.

''உனக்கென்னடா? இங்கே இருந்துகிட்டுப் பயமேன்னு கேக்கறே! அங்கே போனா இல்லே தெரியும்? அசோக்னு பையன் பேருன்னு நினைச்சோம். அது நாய். என்னைப் பார்த்தாலே முறைக்குது. நான் நாய்க்குப் பயப்படறதா? எதிராஜுக்குப் பயப்படறதா?''

''எதிராஜ் மிரட்டினான்னா பதிலுக்கு மிரட்டு.''

''நாய் குரைச்சா பதிலுக்குக் குரைக்கட்டுமா?''

''உன்னை வெச்சுக்கிட்டு என்ன செய்யறதுன்னே எனக்குத் தெரியலை? முத்து. தூக்க மருந்தை நாய்க்குக் கொடுக்கிறதுக்குப் பதிலா ஏன்டா ராஜரத்தினத்துக்குக் கொடுத்தே?''

''அவங்க வீட்டிலே அவங்கள்ளாம், நாய்க்கும் தங்களுக்கும் வித்தியாசம் பார்க்கிறதில்லேன்னு சொல்றாங்க.''

''அது இருக்கட்டும், முத்து. எதிராஜ்கிட்டேயிருந்து அந்த நகையைக் காப்பாத்தணுமே. அதுக்கு நீ என்ன செய்யப் போறே?''

'' அவன்கிட்டே யிருந்து என்னைக் காப்பாத்தணுமே. அதுக்கு நீ என்ன செய்யப் போறே?''

''ஏண்டா, இப்படிப் பேசறே ?''

''பின்னே என்னடா ? அந்த எதிராஜ்கிட்டே என்னாலே என்னடா செய்ய முடியும்?''

''ஒண்ணும் செய்ய வேண்டாம். அவன் நடவடிக்கைகளை மட்டும் கவனிச்சுக்கிட்டேயிருந்து அப்பப்போ என் கிட்டே சொல்லு, போதும்.''

முத்து மௌனமாகத் தலையை அசைத்தான்: கிரிஜாவை நினைத்தால், 'இந்த எதிராஜுக்குப் பயந்து நம் காதலைத் தியாகம் செய்வதா? முடியவே முடியாது' என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் எதிராஜை நினைத்தால் 'ஒரு பெண்ணுக்காகத் திருடனிடம் மாட்டிக் கொள்வதா? கூடவே கூடாது!' என்று தோன்றியது. அவனது மனப் போராட்டத்தில் காதல் தாற்காலிகமாக வெற்றிபெற்றது. தவிர எதிராஜ் நகையைத் திருடாமல் பார்த்துக் கொள்வது தன் கடமை என்பதையும் முத்து உணர்ந்தான்.

''சரி, ரவி ! என்ன நடக்கிறதுன்னு பார்த்துடலாம். கடவுள் விட்ட வழி'' என்று கூறி உள்ளே சென்றான்.

அப்போது வாயிலில், ரவி சாப் ! ரவி சாப்'' என்று கனத்த குரல் கேட்டு ரவி பதட்டத்தோடு வெளியே ஓடிவந்தான்.

வீட்டு வாயிலில் ஒரு பட்டாணியன் மோட்டார் சைக்கிளில் வந்திறங்கி நின்று கொண்டிருந்தான்.

ரவி அவனிடம் விரைந்து சென்று, ''என்னய்யா இது, இங்கேயே வந்துட்டே?'' என்றான் பயத்தோடு.

''வந்தா இன்னா ! நம்பள் பணம் நிம்பள் குட்த்தா — நம்பள் இங்கே இன்னாத்துக்கு வரான்?'' என்றான் பட்டாணியன்.

'நான்தான் சொன்னேனே. கண்டிப்பாக் குடுத்துடுவேன். தயவுசெய்து நீ இங்கே வாராதே. யாராவது பார்த்தாங்கன்னா ரொம்ப அசிங்கமாப் போயிடும்'' என்றான்.

''மிஸ்டர் ரவி ! நம்பள் இந்தத் தெருவிலே கொஞ்சம் வேலே மேலே



'' என் மனைவி போன வருடம் எழுதிப் போஸ்ட் பண்ணக் கொடுத்த கடிதங்கள் தான் அவை. நல்ல வேளை, ஞாபகப்படுத்தினாய். போகச்சே தபால் பெட்டியிலே போட்டுட்டுப் போய்டேன் !''

வந்தான். நிம்பள்கு பார்த்தான்.... வேறே ஒண்ணுமில்லே. பணம் சீக்ரம் கொட்க்ரு. ஒன்னில்லே. இரண்டில்லே எண்பதாயிரம் ரூப்யா!'' என்று கூறி மோட்டார் சைக்கிளை 'ஸ்டார்ட்' செய்து அந்த இடத்தைவிட்டு நகர்ந்தான் பட்டாணியன்.

'தன்னை யாராவது பார்க்கிறார்களா? முத்து இதைக் கவனித்து விட்டானா?' என்று ஒரு முறை சுற்றுமுற்றும் பார்த்த ரவி, யாரும் கவனிக்கவில்லை என்பதை அறிந்து திருப்தி அடைந்தான்.

'கடன்பட்டார் நெஞ்சம் போல் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்ற வார்த்தைகள் அவனுக்கு ஞாபகம் வந்தன. அதற்காக ரவி கலங்கவில்லை. 'யதா ராஜா ததா ப்ரஜா' என்பது சமஸ்கிருதப் பழமொழி. 'அரசன் எவ்வழி, மக்கள் அவ்வழி'. என்பது தமிழ்ப் பழமொழி. கடனில் மூழ்கியும் சற்றும் கவலைப்படாத இந்திய அரசாங்கம் போலக் கலங்காமல் உள்ளே சென்றான், இந்தியப் பிரஜையான ரவி. (தொடரும்)





ரொம்பப்
பெரிதும் அல்ல
ரொம்பச்
சிறிதும் அல்ல

# 1½ டன் எடை சாமான் ஏற்றும்

# பார்கோ D-300

சிறிய வண்டிகளிலே பெரிது; பெரிய வண்டிகளின் உழைப்பு. சுருக்கச் சொன்னால் நடுத்தரமான நல்ல வண்டி பார்கோ D-300. அதிகச் சாமான்களை ஏற்றிச் செல்ல அடக்கமான வண்டி பார்கோ D-300. சாலைகளிலே சங்கடமில்லாமல் ஓட்டவும், போக்குவரத்து நெரிசலைச் சுலபமாகச் சமாளிக்கவும் பொருத்தமான வண்டி பார்கோ D-300. பிக்-அப்-வான் டெலிவரி வான், ஸ்டேஷன் வாகன், ஆம்புலன்ஸ் ஆகிய எந்த விதத்திலும் உபயோகிக்கலாம். நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் ஆட்களையும் சாமான்களையும் குறைந்த செலவில் ஏற்றிச் செல்ல இணையற்ற வண்டி பார்கோ D-300.

***சக்தி மிக்க 28.35 H.P. பெட்ரோல் என்ஜின் • 3,112 மி.மீ. (123") WB அல்லது 3,366 மி.மீ. (133") WB ஆகிய இரண்டில் விருப்பமானதைத் தேர்ந்தெடுக்கலாம் • சுலபமாகவும் விரைவிலும் ரிப்பேர் செய்ய பானெட் திறப்பு வசதி.***

* (பிரீமியர் ஆட்டோமொபைல்ஸ் தயாரிப்பு)



தவணை ஏற்பாடு:

**சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்**

மூலம் சுலபமான மாதத் தவணைகளில் வாங்கலாம்



முழு விவரங்களுக்கு
அன்பு கூர்ந்து அணுகுக:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்,**
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர் - திருவனந்தபுரம்

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்** மதராஸ் - பங்களூர் - செகந்திராபாத் (A.P.)




sf-4272a

# திபேத்தியக் கதைகள்



தொகுத்தது:
கு. அழகிரிசாமி

குழந்தைத்தனம் மிகுந்த
திபேத்தியர்களின் இக்கதைகளில்
எத்தனை சாதுரியமும்
விவேகமும் உள்ளன ?

## பயமோ பயம்

அநேக ஆண்டுகளுக்கு முன்னால் ஓர் ஏரிக் கரையில் ஆறு முயல்கள் வசித்து வந்தன. ஒரு நாள் ஒரு மரத்திலிருந்து ஒரு பெரிய பழம் ஏரியில் விழவே, 'டொம்' என்ற சப்தம் கேட்டது. அதைக் கேட்ட முயல்கள் பயந்து போய் ஒரே ஓட்டமாக அவ்விடத்தை விட்டு ஓடின. அப்போது எதிரே வந்த ஒரு நரி, ''ஏன் இப்படிக் குடல் தெறிக்க ஓடுகிறீர்கள்?'' என்று கேட்டது.

''ஐயோ ! டொம் வருகிறது !'' என்று அலறிக் கொண்டே முயல்கள் ஓடின. அதைக் கேட்டு நரியும் பயந்து போய் முயல்களோடு சேர்ந்து ஓடியது.

சிறிது தூரத்தில் ஒரு குரங்கு வந்து, ''ஏன் இப்படி ஓடுகிறீர்கள் ?'' என்று கேட்டது.

''ஐயோ ! டொம் வருகிறது!'' என்றது நரி. உடனே குரங்கும் பயந்து போய் அவற்றோடு சேர்ந்து ஓடியது.

இப்படியே ஒரு மான், ஒரு பன்றி, ஓர் எருமை, ஒரு காண்டாமிருகம், ஒரு யானை, ஒரு கரடி, ஒரு சிறுத்தை, ஒரு புலி ஆகிய பல மிருகங்களும் 'டொம்' வருகிறது என்ற பயத்தினால் ஓடின. அவற்றைப் பார்த்த ஒரு பெரிய சிங்கம், ''என்ன சமாசாரம் ?'' என்று விசாரித்தது.

''ஐயோ ! டொம் வருகிறது !'' என்று புலி சொன்னது.

''அது யார் அந்த டொம்? எங்கே இருக்கிறது?'' என்று கேட்டது சிங்கம்.

''எனக்குத் தெரியாது!'' என்றது புலி.

''தெரியாமல்தான் இப்படிப் பயப்படுகிறாயா? நன்றாக இருக்கிறது! வா, முதலில் 'டொம்' என்றால் என்ன என்று பார்க்கலாம். உனக்கு இந்த விஷயத்தைச் சொன்னது யார்?'' என்று சிங்கம் கேட்டது.

''சிறுத்தைதான் சொன்னது'' என்றது புலி.

சிறுத்தையைக் கேட்ட போது, ''எனக்குத் தெரியாது. கரடிதான் சொன்னது'' என்றது.

அப்புறம் கரடியைக் கேட்டது சிங்கம். கரடி யானையைக் காட்டியது. யானை காண்டாமிருகத்தைக் காட்டியது. காண்டாமிருகம் எருமையையும், எருமை பன்றியையும், பன்றி மானையும், மான் குரங்கையும், குரங்கு நரியையும், நரி முயல்களையும் காட்டின. கடைசியில் முயல்களைக் கேட்ட போது, ''நாங்களே டொம்மின் சப்தத்தைக் காதால் கேட்டோம். எங்களோடு வாருங்கள். அந்த இடத்தைக் காட்டுகிறோம்'' என்று சொல்லின. எல்லா மிருகங்களையும் ஏரிக் கரைக்கு முயல்கள் அழைத்தும் சென்றன.

அந்தச் சமயத்தில் மற்றொரு பழம் மரத்திலிருந்து 'டொம்' என்று ஏரியில் விழுந்தது. விஷயத்தை அறிந்து கொண்ட சிங்கம், ''இதுதான் டொம் ! பார்த்தீர்களா? ஏரியில்பழம் விழுந்த ஓசை கேட்டுத்தான் இப்படிப் பயந்து ஓடி யிருக்கிறீர்கள் !'' என்று சொல்லிப் பரிகாசமாகச் சிரித்தது.



மற்ற மிருகங்கள் அப்போதுதான் பயம் நீங்கி மூச்சுவிட்டன !

## மணலும் தங்கமும்

ஓர் ஊரில் சாம்பா என்பவனும் சேரிங் என்பவனும் பக்கம் பக்கமாக உள்ள வீடுகளில் வசித்து வந்தார்கள். சாம்பா நல்லவன் ; சேரிங் கெட்டவன். ஒரு நாள் சாம்பா வெளியூருக்குப் போக வேண்டியிருந்தது. அதனால் தன்னிடம் உள்ள பணத்தை யெல்லாம் ஒரு மூட்டையாகக் கட்டிச் சேரிங்கின் வீட்டுக்குக் கொண்டு போனான். ''இந்தப் பண மூட்டையைப் பத்திரமாக வைத்திரு. நான் வெளியூருக்குப் போய்விட்டு ஒரு மாதத்தில் திரும்பி வருகிறேன். வந்ததும் வாங்கிக் கொள்கிறேன்'' என்று சொல்லி மூட்டையைச் சேரிங்கிடம் கொடுத்தான்.

சாம்பா போனதும் கெட்டவனான சேரிங் அந்த மூட்டையில் உள்ள பணத்தை யெல்லாம் எடுத்து வைத்துக் கொண்டு அதற்குப் பதிலாக மணலைப் போட்டுப் பழையபடியே மூட்டையைக் கட்டி வைத்து விட்டான்.

ஒரு மாதம் கழித்துச் சாம்பா வந்தான். சேரிங்கும் மூட்டையை எடுத்துக் கொடுத்தான். அவிழ்த்துப் பார்த்தால் உள்ளே மணல் இருந்தது.

''என்ன இது? பணத்தையல்லவா உன்னிடம் மூட்டை கட்டிக் கொடுத்தேன்? மணலாக இருக்கிறதே!'' என்றான் சாம்பா.

சேரிங் ஒன்றும் தெரியாதவன் போல் நடித்து, ''அப்படியா? பணம் மணலாக

மாறி விட்டது என்று நினைக்கிறேன்'' என்றான்.

சாம்பா மேற்கொண்டு எதுவும் பேசாமல் பண மூட்டையை எடுத்துக் கொண்டு தன் வீட்டுக்குப் போனான்.



சில நாட்கள் கழித்துச் சாம்பா ஒரு பாடசாலை திறந்து அதில் யார் வேண்டுமானாலும் சம்பளம் கொடுக்காமல் இலவசமாகப் படிக்கலாம் என்று அறிவித்தான். சேரிங்கும் தன் மகனை அந்தப் பாடசாலைக்கு அனுப்பினான்.

ஒரு நாள் சேரிங் வெளியூருக்குப் போக வேண்டியிருந்தது. அவன் சாம்பாவிடம் வந்து, ''என் பிள்ளையைப் பார்த்துக் கொள். ஒரு மாதத்தில் திரும்பி வந்து விடுவேன்'' என்று சொல்லி விட்டுப் போனான்.

சாம்பா உடனே வெளியே போய், ஒரு குரங்கைப் பிடித்து வந்து, ''அப்பா! நான் இப்படி மாறிவிட்டேன்! அப்பா! நான் இப்படி மாறிவிட்டேன்!'' என்று சொல்லும்படி அதைப் பழக்கினான்.

ஒரு மாதம் கழித்து ஊர் திரும்பிய சேரிங் மகனைப் பார்க்கப் பள்ளிக்கூடத்துக்கு வந்தான். வகுப்பில் சாம்பா பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். எதிரே மாணவர்கள் உட்கார்ந்திருந்ததோடு ஒரு குரங்கும் இருந்தது. சேரிங்கின் மகனை மட்டும் காணவில்லை.

'' எங்கே என் மகன் ?'' என்று கேட்டான் சேரிங்.

சாம்பா ஒன்றும் சொல்லாமல் குரங்கைப் பிடித்துக் கொண்டு வந்து சேரிங்கின் முன்னால் விட்டான்.

''என் மகன் எங்கே என்று கேட்டால் குரங்கைப் பிடித்துக் கொண்டு வருகிறாயே !'' என்றான் சேரிங்.

உடனே குரங்கு, ''அப்பா! நான் இப்படி மாறிவிட்டேன்! அப்பா, நான் இப்படி மாறிவிட்டேன்!'' என்று சொன்னது.

சேரிங் ஒன்றும் பேசாமல் வெளியே போனான். சாம்பாவின் பண மூட்டையைக் கொண்டு வந்து மரியாதையாகக் கொடுத்தான். சாம்பாவும் சேரிங்கின் மகனைத் தன் வீட்டிலிருந்து அழைத்துக் கொண்டு வந்து அவன் முன்னால் விட்டான்.

## அற்ப விஷயமும் ஆபத்தும்

ஒரு மரத்தில் ஒரு சிட்டுக் குருவி கூடுகட்டி மூன்று முட்டைகள் இட்டது. அதே மரத்தில் வாழ்ந்து வந்த ஒரு பச்சைப் பாம்பு இரண்டு முட்டைகளைத் தின்றுவிட்டது. அதனால் மனம் உடைந்துபோன குருவி, பறவைகளின் ராணியான கழுகினிடம் போய், ''என் முட்டைகள் இரண்டை ஒரு கொடிய பச்சைப் பாம்பு தின்று விட்டது. அதனால் நான் இரண்டு அழகிய குஞ்சுகளை இழந்துவிட்டேன். அந்தப் பாம்பை நீ தண்டிக்க வேண்டும்'' என்று துயரத்தோடு முறையிட்டது.

சிட்டுக் குருவி மிகச் சிறிய பறவையானதால் அதன் கஷ்ட நஷ்டங்களையும் துயரத்தையும் கழுகு ஒரு பொருட்டாகவே கருதவில்லை. ''இவ்வளவுதானா? இந்த அற்ப விஷயத்துக்கா இவ்வளவு தூரம் ஆத்திரப்படுகிறாய்? உன் குஞ்சுகளை நீதான் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் பாதுகாப்பார்களா? போ, போ!' என்று சொல்லி விட்டது கழுகு.

''நீ பறவைகளின் ராணி என்பதனால்தான் உன்னிடம் வந்து முறையிட்டேன். நீயோ என்னைக் கேவலமாக நினைத்து உன் கடமையைச் செய்ய மறுக்கிறாய். அற்ப விஷயத்தைச் சரிபண்ணாமல் விட்டு விட்டால் அது பெரிய நாசத்தையே உண்டு பண்ணி விடும். அம்மாதிரிப் பெரிய விபரீதம் எதுவேனும் நடக்குமாயின் என்னைக் குற்றம் சொல்லாதே'' என்று எச்சரித்தது.

கழுகோ அதைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை.

குருவி ஆத்திரத்துடன் திரும்பி வந்து ஒரு புல்லைப் பிடுங்கி வைத்துக் கொண்டு மரக் கிளையில் மறைவாக உட்கார்ந்தது. மீதியுள்ள முட்டையைத் தின்பதற்குப் பச்சைப் பாம்பு வந்தது. உடனே குருவி புல்லினால் பாம்பின் கண்ணைப் பலமாகக் குத்திவிட்டது. பச்சைப் பாம்பு வேதனையால் துடித்து, கீழே குளத் தங்கரையில் தூங்கிக் கொண்டிருந்த ஒரு சிங்கத்தின் மூக்கில் விழுந்து, மூக்குக்கு உள்ளேயும் நுழைந்து விட்டது. சிங்கம் பதறியடித்துக் கொண்டு எழுந்தது. பாம்பு மூக்கைக் குடையவே சிங்கம் மிரண்டு போய்க் குளத்தில் குதித்தது. அப்போது அந்தக் குளத்தில் கிடந்த ஒரு ராக்ஷஸ நாகம் — அதற்குப் பறக்கும் சக்தியும் உண்டு — சிங்கத்தைக் கண்டு பயந்து குளத்தை விட்டுப் பறந்து விட்டது. அது பறந்து சென்ற வேகத்தில் கழுகின் கூட்டை மோதவே, அதன் உள்ளேயிருந்த கழுகு முட்டை உடைந்துவிட்டது. கழுகு மிகுந்த கோபாவேசத்துடன், ''நீ ஏன் உன் குளத்தை விட்டு வந்தாய்? இங்கே வந்து என் முட்டையை எதற்காக உடைத்தாய் ?'' என்று கேட்டது.

''நான் என்ன செய்வேன் ? ஒரு சிங்கம் குளத்தில் குதித்தது. அதைக் கண்டு பறந்து வரும்போது உன் முட்டையைத் தெரியாமல் உடைத்து விட்டேன்.''



கழுகு சிங்கத்திடம் போய், ''நீ குளத்தில் குதித்ததால்தானே ராக்ஷஸ நாகம் என் கூட்டில் மோதி முட்டையையும் உடைத்தது? நீதான் குற்றவாளி'' என்றது.

சிங்கமோ, ''என் மூக்கில் ஒரு பச்சைப் பாம்பு விழுந்து குடைந்தது. மிரண்டு போய்க் குளத்தில் குதித்தேன். நான் எப்படிக் குற்றவாளியாக முடியும்?'' என்றது.

பிறகு பச்சைப் பாம்பைக் கழுகு குற்றம் சாட்டவே, அது சிட்டுக் குருவியின் மேல் பழியைப் போட்டு, குருவி தன் கண்ணைக் குத்தியதால் மரத்திலிருந்து வேதனையோடு கீழே விழுந்ததாகவும், அப்போது சிங்கத்தின் மூக்கை ஒரு பொந்து என்று நினைத்து உள்ளே புகுந்து விட்டதாகவும் சொன்னது.

கடைசியில் குருவியை விசாரித்தது கழுகு. குருவி பின்வருமாறு சொன்னது:

''அற்பமான விஷயத்தைச் சரிபண்ணாமல் விட்டுவிட்டால் பெரிய ஆபத்து உண்டாகும் என்று அப்பொழுதே எச்சரித்தேன். நீ கேட்கவில்லை. உன்னுடைய அலட்சியத்தினால் உன் குஞ்சை இழந்து விட்டாய். அதற்கு என்னைக் குற்றம் சாட்டுவது எப்படி நியாயமாகும்? உன் குஞ்சுகளை நீதான் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் எப்படிப் பாதுகாப்பார்கள்?''

கழுகு பதில் பேச முடியாமல் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவ்விடத்தை விட்டுப் பறந்தது.

## தவளையும் காகமும்

ஒரு காகம் ஒரு தவளையைப் பிடித்துக் கொண்டது. அதை அலகில் கவ்விக்கொண்டு ஒரு கூரையில் போய் உட்கார்ந்து கொத்தித் தின்ன நினைத்தது. காகம் கூரையில் உட்கார்ந்ததும் தவளை சிரித்தது.

''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது காகம்.

''வேறொன்றும் இல்லை. இதே கூரையில் இன்னொரு மூலையில் என் அப்பா இருக்கிறார். மகாபலசாலி. கோபக்காரர். நான் குரல் கொடுத்தால் உடனே வந்து உன்னை ஒரே அறையில் கொன்று சாப்பிட்டு விடுவார் '' என்றது.

இதைக்கேட்ட காகம், 'இந்த இடம் சரியில்லை ' என்று தவளையைக் கவ்விக் கொண்டே ஒரு சாக்கடைக்குப் பறந்து சென்று அங்கே உட்கார்ந்தது. அப்போதும் தவளை சிரித்தது.

''ஏன் சிரிக்கிறாய்?''

''வேறொன்றுமில்லை. இங்கே சிறிது தூரத்திலேயே என் மாமா இருக்கிறார். அவர் எங்கள் அப்பாவை விட நூறு மடங்கு பலசாலி. என்னுடைய குரல் கேட்டு அவர் வந்தால் உன் கதி அதோ கதிதான்.''



காகம் பார்த்தது. அந்த இடமும் பாதுகாப்பானதல்ல என்று தவளையைக் கவ்விக் கொண்டு ஒரு கிணற்றோரத்தில் போய் உட்கார்ந்தது. தவளையைச் சாப்பிடப் போகும் தருணத்தில், ''காகமே! உன் அலகு மழுங்கியிருக்கிறது. அதனால் என் உடம்பைக் கிழிப்பதோ கடிப்பதோ உனக்குக் கஷ்டமாக இருக்கும்; எனக்கும் கஷ்டமாக இருக்கும். இதோ பக்கத்தில் கிடக்கும் கல்லில் உன் அலகைத் தீட்டிக் கொண்டு அப்புறம் என்னைக் கொத்தித் தின்னு. நீயும் கஷ்டமில்லாமல் பசியாறலாம்; நானும் கஷ்டமில்லாமல் உயிரைவிடலாம்'' என்று சொன்னது தவளை.

காகமும் அவ்வாறே தவளையைக் கீழே விட்டு விட்டுக் கல்லில் அலகைத் தீட்டத் தொடங்கியது. அந்தச் சமயத்தில் தவளை கிணற்றினுள் குதித்து விட்டது. காகம் அலகைத் தீட்டிக் கொண்டு வந்து, '' தவளையே! மேலே வா! அலகைத் தீட்டி விட்டேன்'' என்று சொல்லி அழைத்தது.

''என்னால் எப்படிச் சுவரில் ஏறி வர முடியும்? நீயே இங்கே வந்து சாப்பிடு'' என்று சொல்லித் தவளை நீரில் மூழ்கியது.

## நூதன மனைவி!

மத்தியப் பிரதேசத்தில் கின்கெட் என்ற கிராமத்தில் அறுபது வயதுப் பணக்காரர் ஒருவர் மறுமணம் செய்து கொள்ள முற்பட்டார். இந்தோரில் ஒருவர் பெண் தர முன்வந்தார். பெண்ணின் தகப்பனுருக்குக் கிழவனார் 10,000 ரூபாய் பரிசமும் தந்தார். கலியாணம் நடந்தது. மணப் பெண் முகத்திரை அணிந்திருப்பது பெண் வீட்டுச் சம்பிரதாயமாதலால் கிழவர் தமது புது மனைவியைப் பார்க்கவேயில்லை.

கின்கெடுக்கு மனையாளுடன் திரும்பிய கிழவர் அவளது முகத்திரையை விலக்கிப் பார்த்ததும் திக்குமுக்காடிப் போய்விட்டார். காரணம் அவர் கலியாணம் செய்துகொண்டது ஒரு பதினெட்டு வயது வாலிபனையாக்கும்! கிழவருக்கு அவமானம் தாங்கவில்லை. தமது மானத்தைக் காக்கச் சொல்லி அந்தப் பிள்ளையிடம் வேண்டிக் கொண்டு இந்தோருக்கு ரயில் கட்டணம் தந்து அனுப்பி வைத்தார். ஆனாலும் விஷயம் பகிரங்கமாகி, பிரபல மராத்திப் பத்திரிகையான 'கேசரி'யில் வெளியாகியுள்ளது.

- 'வி'

## திருமணம்



மதராஸ், ஸிஸ்டாஸ் விளம்பர கம்பெனியில் பணிபுரியும் திரு டி. என். சுவாமிநாதனுக்கும் சௌபாக்கியவதி விசாலாக்ஷிக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## ஷஷ்டியப்த பூர்த்தி



கொச்சின் கஸ்டம்ஸில் பணிபுரியும் ஸ்ரீ ஜி. ரகுராமன், பி.எஸ்ஸி., அவர்களின் தந்தையார் ஸ்ரீ ஆர். கோபாலகிருஷ்ணய்யர் (ஓய்வுபெற்ற டெபுடி கலெக்டர்) அவர்களுக்கு ஷஷ்டியப்த பூர்த்தி வெகு விமரிசையாக சமீபத்தில் எர்ணுகுளத்தில் நடைபெற்றது.

## பிரபல திருமணம்



சௌபாக்யவதி பிரியம்வதா
சிரஞ்சீவி ஸ்ரீராம் சங்கர்

சென்னை சர்வகலாசாலை சம்ஸ்கிருதப் பேராசிரியர் டாக்டர் வே. ராகவன் அவர்களின் குமாரி சௌபாக்யவதி பிரியம்வதாவுக்கும், கோவை பாங்கர் ஸ்ரீ டி. எஸ். சங்கரனின் குமாரரும், கனடா ஐக்கிய விமானத் தொழிலில் என்ஜினியராக உள்ளவருமான சிரஞ்சீவி டி. ஸ்ரீராம் சங்கருக்கும் சமீபத்தில் சென்னை தேனாம்பேட்டை அபட்ஸ்பரியில் அதிவிமரிசையாக விவாகம் நடைபெற்றது. முகூர்த்தத்துக்கும், வரவேற்பின்போது நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இசைக் கச்சேரிக்கும், இரவு நடைபெற்ற ஸ்ரீ எம்பார் விஜயராகவாச்சாரியின் ஹரிகதைக்கும் [ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்தனர். திருமணத்தை ஒட்டி சிறப்பாக வித்வத் சதஸ் ஒன்று கூட்டப்பெற்று வித்துவான்கள் சம்மானிக்கப்பட்டதும், விருந்தினர் அனைவருக்கும் தேவி மாகாத்மியம் மொழிபெயர்ப்பு அன்பளிப்பாக வழங்கப்பட்டதும் குறிப்பிட வேண்டியவை.

வாழ்க மணமக்கள்!

# கல்லுக்குள் ஈரம்

## அத்தியாயம் 38

## பண்பின் சிகரம்




சிவானந்தம் இலேசாகச் சிரித்துக் கொண்டே சர்தார் சொக்கலிங்கம் பிள்ளையை உற்றுப் பார்த்தான்.

''ரங்கமணி சொன்னால் திரிவேணி கேட்கலாம்'' என்றான் சிவானந்தம் நம்பிக்கையுடன்.

''ஊஹூம்... ரங்கமணி இந்த விஷயத்தில் தலையிடவும் மாட்டான். தலையிட்டாலும் திரிவேணி கேட்க மாட்டாள்.''

''இந்தப் பெண்களே ஒரு புதிர்தான்... எதற்கும் முயன்று பார்ப்போமே.''

''அதுகூட இப்போது முடியாது. ரங்கமணி ஊரில் இல்லை. காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்துக்குச் சுயேச்சைப் பத்திரிகையின் நிருபராகப் பம்பாய் சென்றிருக்கிறான். அவன் திரும்பி வர இன்னும் மூன்று நான்கு நாட்களாவது ஆகும்'' என்றார் சர்தார்.

சிவானந்தம் மனம் சோர்ந்து விட்டான்.

''நாளை என்மீது நீங்கள் வருத்தப்படக் கூடாது. போலீஸ் தன் கடமையை நிறைவேற்ற வேண்டியிருக்கும்'' என்றான். சர்தார் சொக்கலிங்கம் பிள்ளை சிரித்தார்.

''மிஸ்டர் சிவானந்தம், மகாபாரதத்தில் இப்படித்தான் ஒரு கட்டம் வருகிறது. கௌரவர்களை எதிர்த்துச் சண்டை செய்ய கௌரவர்கள் பக்கத்திலிருந்த பீஷ்மரிடமே அனுமதி கேட்டார் தர்மர்'' என்றார்.

''அது மாதிரி உங்களிடம் அனுமதி கேட்கிறேன்'' என்றான் சிவானந்தம் சோகப் புன்னகையுடன்.

''திரிவேணிக்கு எதிராகப் போர் நடத்தவா...? மிஸ்டர் சிவானந்தம், எனக்கு இது மனக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. என்ன செய்ய முடியும்? உங்கள் கடமையைச் செய்யுங்கள். நான் உங்களிடம் கேட்பது ஒன்றே ஒன்றுதான். என்னதான் நாம் அடக்குமுறையில் இறங்கினாலும் நாம் தாக்குவது நம்முடைய சகோதரர்களைத்தான் என்பதை மறந்துவிடக் கூடாது. கொஞ்சம் மனித உணர்வோடு நடந்து கொள்ள வேண்டும். அவ்வளவுதான்'' என்றார் சர்தார்.

''எனக்கும் அதுதான் கவலை. இருந்தாலும் கடமை ஒன்றிருக்கிறதே!'' என்று கூறி விட்டுச் சென்றான் சிவானந்தம்.

# ர.சு.நல்லபெருமாள்

## பரிசு நாவல்

சிவானந்தம் காரில் ஏறிச் சென்ற பிறகு சர்தாரின் அறைக்குள் சோமுவும், மீனாட்சிநாதனும் நுழைந்தார்கள். சிவானந்தத்திடம் பேசியது பற்றி அவர்களிடம் கூறினார், சர்தார்.

''சிவானந்தம் நல்லவன்தான். ஆனால் அவன் மனைவி கமலா ஒரு ராக்ஷஸியாச்சே. இவன் சும்மா இருந்தாலும் அவள் விடமாட்டாளே. கள்ளுக்கடை மறியலில்கூடப் போலீஸை அவ்வளவு தூரம் மிருகத்தனமாகத் தாக்கத் தூண்டியவள் அவள்தான்'' என்றான் மீனாட்சிநாதன்.

''நாளை மறுநாள் நடக்கும் ஊர்வலத்தைக் கூடக் கடுமையாகத் தாக்கும்படி கூறுவான்'' என்றான்சோமு.

''அவளைக் கடத்திக் கொண்டு வந்து விட்டால் ஒரு விபரீதமும் நடக்காது'' என்றான் மீனாட்சிநாதன்.

''அவளைக் குறைகூறி என்னப்பா பிரயோஜனம்? அவன் சொல்லுக்குத் தாளம் போடுகிறானே, இந்தச் சிவானந்தம். இந்த மடையனையல்லவா திருத்த வேண்டும்'' என்றார் சர்தார், எரிச்சலுடன்.

''சப் இன்ஸ்பெக்டர் நம்முடைய ஆள்தான். அவர் மூலமாக என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறார்கள் என்பதை முன்கூட்டியே அறிந்து கொள்ளலாம்'' என்றான் மீனாட்சிநாதன்.

''நீங்களும் ஜாக்கிரதையாக இருங்கள். சுயேச்சைப் பத்திரிகை ஆபீஸைக்கூடச் சோதனை போட வேண்டும் என்று கமலா சொன்னதாகக் கேள்வி. அந்தப் பெண் பேய் எதை வேண்டுமானாலும் செய்யும். ஜாக்கிரதை'' என்று எச்சரித்தார் சர்தார்.

''வந்தே மாதரம்.''

''வந்தே மாதரம்...''

''மகாத்மா காந்திக்கு......''

''ஜே....''

''வெள்ளையனே ....''

''வெளியேறு......''

கடல் பொங்கிவருவது போல் ஊர்வலம் முன்னேறிக்கொண்டிருந்தது. ஊர்வலத்தின் முன்னால் திரிவேணி மூவர்ணக் கொடியை ஏந்தி வந்தாள். பக்கத்தில் அத்தையும், தீக்ஷிதரும் வந்து கொண்டிருந்தார்கள். கிட்டத்தட்ட ஊர்வலம் திருநெல்வேலி முனிசிபல் அலுவலகத்திலிருந்து ஜங்ஷன் ரயில் வண்டி நிலையம் வரை நீண்டிருந்தது! இவ்வளவு பெரிய கூட்டம், இதுவரை இங்கே

கூடியதே இல்லை. காங்கிரஸ் கட்சியின் தலைவர்கள் கைதானதால் மற்ற இடங்களில் தோன்றிய புரட்சித் தீ, நெல்லைவாசிகளின் இதயத்திலும் புகுந்து விட்டது. கடை வீதியில் ஒரு கடைகூடத் திறக்கப்படவில்லை. அனைவரும் ஊர்வலத்துக்கு வந்துவிட்டார்கள். மக்களின் உள்ளத்தில் வெறி புகுந்து விட்டது. ஊர்வலத்தில் எழும்பிய கோஷத்தால் ஊரே அதிர்ந்தது.

சிவானந்தம் மிகுந்த மனக் கவலையோடு இருந்தான். அவனுக்கும் கமலவாசகிக்கும் தர்க்கம். ஊர்வலத்தை நடத்தவே விடக் கூடாது ; ஆரம்பத்திலேயே கலைத்து விரட்ட வேண்டும் என்பது அவள் இட்டம். ஆனால், சிவானந்தம் அதற்குச் சம்மதிக்கவில்லை.

''வெறி கொண்ட கூட்டத்துக்குப் போக்குக் கொடுத்து விட்டால் வெறி தானே அடங்கி விடும். மக்கள் கலைந்துவிடுவார்கள். கொடியைத்தானே கட்டப் போகிறார்கள். கட்டிவிட்டுப் போகட்டும். இதைப் போய்த் தடுத்துக் கொண்டிருந்தால், மக்களின் வேகம் வேறு எப்படித் திரும்புமெனச் சொல்ல முடியாது'' என்று வாதாடினான் சிவானந்தம்.

''நீங்கள் இப்படித் தாராள மனத்துடன் இருப்பதால்தான் கெட்ட பெயர் வருகிறது. இந்த மாதிரியான எழுச்சிகளை யெல்லாம் முளையிலேயே கிள்ளிவிட வேண்டும்.''

''இப்போது இந்தக் கூட்டம் என்ன செய்து விட்டது? கூச்சல் போட்டுக் கொண்டு தெரு வழியாகப் போகிறது. அதன் போக்கை மறித்தால் விபரீதந்தான் நடக்கும். விபரீதம் ஏதும் நிகழாமல் பார்த்துக் கொள்வதுதான் நம்முடைய கடமையே தவிர, வீணாக மக்களை அடித்துத் துன்புறுத்துவதல்ல'' என்றான் சிவானந்தம், கண்டிப்புடன்.

இருவரும் கூட்டத்துக்குப் பின்னால் காரில் சென்று கொண்டிருந்தார்கள். கூட்டத்தோடு மூன்று போலீஸ் லாரிகளும் சென்றன. காரில் செல்லும் போதே கூட்டத்துக்குள் பார்வையைச் செலுத்தித் துழாவினாள் கமலவாசகி. அந்தக் கூட்டத்துக்குள் ரங்கமணியைத் தேடினாள். ஆனால் அவளுக்கு ஏமாற்றந்தான். அந்த மாபெரும் கூட்டத்தில் ரங்கமணியைத் தேடி அவள் பார்வை அலுத்தது.

சிவானந்தத்தின் கார், 'ஜங்ஷன் லெவல் கிராஸிங்' பக்கம் வந்ததும் இடது பக்கமாகத் திரும்பி குறுக்குத்துறை வழியாகச் சென்று டவுனுக்குப் போய்ச் சேர்ந்தது. ஊர்வலம், டவுனுக்குப் போய்ச் சேர்வதற்குள் சிவானந்தத்தின் கார் அங்கு போய்ச் சேர்ந்து விட்டது. டவுனில் நின்ற இரண்டு போலீஸ் லாரிகளில் இருந்த போலீஸ்காரர்களை மேற்பார்வை இட்டுவிட்டுச் சந்திப் பிள்ளையார் கோயில் பக்கத்தில் காரை ஒதுக்குப் புறத்தில் நிறுத்தினான் சிவானந்தம்.

''நீ என்னோடு வந்ததே தவறு'' என்றான் கமலவாசகியைப் பார்த்து.

''ஏனோ?'' — கமலவாசகி கேட்டாள்.

''என்னை எதுவும் செய்யவிடமாட்டாய். எதையாவது சொல்லிக் குழப்பிக் கொண்டிருப்பாய்.''

''நீங்கள் குழம்பித் தவிக்கக் கூடாது என்பதற்காகத்தானே உங்களோடு புறப்பட்டேன். நான் இல்லையென்றால், ஒரு வேளை நீங்களே கொடியை வாங்கிக் கட்டுவீர்களோ என்னவோ?'' என்றாள் கமலவாசகி சற்று எரிச்சலுடன்.

அப்போது ஓர் இரகசியப் போலீஸ்காரன் சிவானந்தத்திடம் வந்தான். ''சார், நம்முடைய வெங்கிடகிருஷ்ணனும் ஊர்வலத்தோடு வருகிறார்'' என்றான்.

''என்ன வெங்குவும் வருகிறானா? இந்த அசடு அங்கே ஏன் போனான்?'' என்றாள் கமலவாசகி பரபரப்புடன்.

''அவனைக் கூட்டத்திலிருந்து பிரித்து வீட்டுக்குக் கூட்டிப் போய்விடேன்'' என்றான் சிவானந்தம்.

'' கூட்டத்தில் அது முடியாத காரியம் சார்.''

''ஏன்? நீதான் போலீஸ் உடையில் இல்லையே. கூட்டத்தில் போகிறவன் மாதிரி நுழைந்து அவனை இழுத்துக் கொண்டு போய்விடு.''

''வெங்கிடகிருஷ்ணன் உற்சாகத்துடன் கோஷம் போட்டுக் கொண்டு திரிவேணிக்குப் பின்னால் அல்லவா வருகிறார்? அவரை இந்தச் சமயத்தில் நெருங்கிக் கூப்பிடுவது சாத்திய மில்லையே !'' என்று தலையைச் சொறிந்தான் போலீஸ்காரன்.

''சரி, ஊர்வலம் இங்கு வந்ததும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன் '' என்றான் சிவானந்தம்.

ஊர்வலம், சுவாமி சந்நிதி மண்டபத்துக்குள் நுழைந்து கீழ ரத வீதி வழியாக வடக்கு ரத வீதியை அடைந்து விட்டது. நான்கு ரதவீதிகளிலும் இருவரிசையிலும் இருந்த கடைகள் அனைத்தும் அடைத்துக் கிடந்தன. வடக்கு ரத வீதியில் சென்று கொண்டிருந்த ஊர்வலத்தினரின் கோஷம் சந்திப் பிள்ளையார் கோயிலுக்குக் கேட்டது. சிறிது நேரத்தில் ஊர்வலம் மேலரத வீதிக்குள் நுழைவது, சந்திப் பிள்ளையார் கோயில் பக்கத்திலிருந்த சிவானந்தத்துக்கு நன்றாகத் தெரிந்தது. ''வந்தே மாதரம்....'' என்ற கோஷம், மேலரத வீதியில் நிறைந்து, பாக்கி மூன்று ரதவீதிக்குள்ளும் புகுந்தது. சிறிது நேரத்தில் ஊர்வலம் சந்திப் பிள்ளையார் கோயிலை நெருங்கியது. கூட்டத்தின் முன்னணியில் வந்த திரிவேணி சந்திப் பிள்ளையார் கோயிலின் வட பக்கம் காருக்குப் பக்கத்தில், சிவானந்தம் நிற்பதையும், காருக்குள் கமலவாசகி இருப்பதையும் பார்த்துக் கொண்டாள்.

திரிவேணிக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த வெங்கு, தூரத்தில் வரும்போதே சிவானந்தத்தின் காரைக் கண்டுவிட்டான். உடனே கூட்டத்தில் பின்வாங்கி மறைந்து கொண்டான்.

சிவானந்தத்தைக் கண்ட கூட்டம் ஊரே அதிரும்படி கோஷமிட்டது. ஊர்வலத்தின் முன்னணியில் கமலவாசகியின் பார்வை, பதிந்து துளாவியது. ரங்கமணியைக் காணாமல் கண்கள் சோர்ந்தன. காரை விட்டுக் கீழே இறங்கி, பக்கத்தில் கிடந்த ஒரு பாறாங் கல்லின் மீது ஏறி நின்று கொண்டு கூட்டத்

தைப் பார்வையால் அலசினாள். பாவம், அவள் கண்களுக்கு ரங்கமணி தென்படவே இல்லை. ஏமாற்றத்தால் அவள் முகம் வாடி விட்டது.

கூட்டம் பிள்ளையார் கோயிலை நெருங்கி விட்டது. அப்போது கூட்டத்திலிருந்த ஒருவன், பிள்ளையார் கோயிலுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒரு போலீஸ் லாரியின் மீது மூவர்ணக் கொடியைக் கட்ட முனைந்தான். ஒரு கையில் கொடியை ஏந்திக் கொண்டு, லாரி மீது ஏற முயன்றான். ஆனால் போலீஸ்காரர்கள் அவனை இழுத்துக் கீழே தள்ளி விட்டார்கள். கொடியோடு அவன் கீழே விழவே, கூட்டத்தில் குழப்பம் தோன்றியது. போலீஸ் லாரியிலிருந்து கீழே விழுந்தவன் எழுந்து நின்று கொண்டு, ''போலீஸ் அடக்குமுறை ஒழிக....'' என்று கத்தினான். பக்கத்தில் நின்ற மற்றொருவன், ''போலீஸ் அட்டூழியம் ஒழிக.....'' என்று கூவிக் கொண்டே கையிலிருந்த கல்லைப் போலீஸ் லாரி மீது வீசி எறிந்தான்.

அதுவரை எவ்வித அசம்பாவிதமும் இல்லாமல் வந்து கொண்டிருந்த ஊர்வலத்தில் திடீரென்று சலசலப்புத் தோன்றியது. சந்தர்ப்பத்துக்காகக் காத்திருந்த காலிகள் ரௌடித்தனத்தில் இறங்கி விட்டார்கள். சமுத்திரம் மாதிரி அலைமோதிக் கொண்டிருந்த மாபெரும் கூட்டத்துக்கு நடுவே வெறிக் கூச்சலும், பேய்க் கூத்தும் தோன்றி விட்டன.

எல்லாரையும் அமைதியாக இருக்கும்படி வேண்டினாள் திரிவேணி. கைகளை உயர்த்திக் கூட்டத்தை அமைதிப்படுத்த முயன்றாள். ஆனால் கூட்டம் கொந்தளிக்கத் தொடங்கி விட்டது. கூட்டத்தைச் சமாதானப்படுத்தி அழைத்துச் செல்ல தீக்ஷிதரும் தீவிரமாக முயன்று கொண்டிருந்தார். ஆனால் முடியவில்லை. கூட்டம் போலீஸ் லாரியை நெருங்கவே லாரிக்குள்ளிருந்த போலீஸ்காரர்கள் வெளியே குதித்து விட்டார்கள். லாரியைத் தலை கீழாகக் கவிழ்த்தது கூட்டம்.

இதைக் கண்ட கமலவாசகியின் கண்கள் நெருப்பைக் கக்கின. பதற்றத்துடன் சிவானந்தத்தைப் பார்த்தாள். அவன் போலீஸ்காரர்களுக்கு உத்தரவு இட்டுக் கொண்டிருந்தான்.

தெருவில் மல்லாந்து கிடந்த லாரியின் மீது ஒருவன் பெட்ரோலை ஊற்றினான்..... பிள்ளையார் கோயிலுக்குள் எரிந்து கொண்டிருந்த தீப்பந்தத்தை வேறொருவன் எடுத்து வந்து லாரிக்குத் தீ மூட்டினான். லாரியில் குபீரென்று தீப்பற்றி எரிந்தது.

''ஏன் சும்மா இருக்கிறீர்கள்? கூட்டத்தை நோக்கிச் சுடச் சொல்லுங்கள்'' என்று அவசரப்படுத்தினாள் கமலவாசகி.

''பொறு, அவசரப்படாதே. கூட்டம், சாமான்யக் கூட்டமல்ல. ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும்'' என்று சிவானந்தம் சொல்லி வாய் மூடுவதற்குள் கூட்டத்திலிருந்து சரமாரியாகக் கற்கள் நாலாபுறமும் பறக்கத் தொடங்கி விட்டன. சிவானந்தத்திடம் ஓடி வந்தார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.



## எழுத்தின் எடை

லண்டனில் அரசாங்கப் பணம் அச்சடிக்கும் தொழிற்சாலையில், அனைவரும் பார்க்க வேண்டிய ஒரு விஞ்ஞானப் பொருள் உள்ளது. அது ஒரு தராசு. மயிரிழையின் எடையையும் கண்டு பிடித்துவிடும். அத்தனை நுணுக்கமாகச் செய்திருக்கிறார்கள் அந்தத் தராசை.

சம அளவுள்ள பேப்பர்களைத் தட்டுக்கு ஒன்றாக அந்தத் தராசில் போட்டால், அளவு சரியாக இருப்பின், முள் நகராது. பிறகு இரண்டு பேப்பரையும் எடுத்து விடுங்கள். ஒன்றில் உங்கள் கையெழுத்தைப் போட்டு அந்தத் தட்டுக்களில் வையுங்கள். உங்கள் கையெழுத்துள்ள பேப்பர் அதிக கனமாகி விட்டதை அந்தத் தராசின் முள் காட்டும். — ஜோரமக

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''சார், கட்டுக்கடங்காமல் போய்விட்டது. தடியடிப் பிரயோகத்துக்கு உத்தரவு கொடுங்கள். கூட்டத்தை உடனே கலைத்தாக வேண்டும்'' என்றார் இன்ஸ்பெக்டர் பரபரப்புடன்.

தடியடிப் பிரயோகத்துக்கு உத்தரவு கொடுத்த மறுகணம் ஒரு பெரிய கல், கூட்டத்திலிருந்து பறந்து வந்து சிவானந்தத்தின் தலையைப் பலமாகத் தாக்கியது. அந்த இடத்திலேயே தலையை இரு கைகளாலும் தாங்கிக் கொண்டு சுருண்டு மயங்கித் தரையில் சாய்ந்தான். அதைக் கண்ட கமலவாசகி பதை பதைத்தாள்.

''ஏன் நிற்கிறீர்கள்? சுட்டுத் தள்ளுங்கள். கூட்டம் நம்மையெல்லாம் கொன்று விடும். சுடுங்கள்'' என்று ஆவேசத்துடன் இன்ஸ்பெக்டரைப் பார்த்து கத்தினாள் கமலவாசகி.

கூட்டம் கட்டுக்கடங்காமல் வெறியாட்டம் ஆடத் தொடங்கி விட்டது. என்ன செய்கிறோம் என்பதே தெரியாமல் மக்கள் அறிவை இழந்து செயலில் இறங்கிவிட்டார்கள். திரிவேணியும், தீக்ஷிதரும் செய்வதறியாது திகைத்தார்கள். இதற்குள் போலீஸார் தடியால் அடிக்கத் தொடங்கி விட்டார்கள். இதனால் கூட்டத்தின் வெறி இன்னும் அதிகமாகி விட்டது.

மேலரத வீதி முழுவதும் ஒரே பயங்கரக் கூச்சலும், அலறலுமாக நிறைந்துவிட்டன. போலீஸ் அடிக்கத் தொடங்கியதும், கூட்டத்தினர் பீதியினால் சிதறி ஓடத் தொடங்கினர். கூட்டத்தின் நெரிசலில் அகப்பட்டுப் பலர் கீழே உருண்டனர். அந்த நேரத்திலும் தீக்ஷிதர், ''வந்தே மாதரம்.... தைரியமா

யிருங்கள்...அமைதியா யிருங்கள்...'' என்று கூவிக் கொண்டிருந்தார். கூட்டமோ எதையும் சட்டை செய்யாமல் சிதறத் தொடங்கியது. வெறி கொண்ட கூட்டத்திலிருந்து போலீஸ்காரர்களை நோக்கிப் பொழிந்து கொண்டிருந்த கல் மழை நின்றபாடில்லை. பல போலீஸ்காரர்களின் நெற்றியில் கல் பட்டு இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. லாரியில் எரிந்து கொண்டிருந்த நெருப்பின் வெளிச்சத்தில் அந்தக் காட்சி கோரமாயிருந்தது. அந்தப் பிரதேசம் ஏதோ ஒரு போர்க்களம் மாதிரி காட்சியளிக்கத் தொடங்கி விட்டது.

கீழே மயங்கி விழுந்துவிட்ட சிவானந்தத்தை இரண்டு போலீஸ்காரர்கள் தூக்கிக் காருக்குள் கிடத்திக் கொண்டிருந்தார்கள். கமலவாசகி பிரமை பிடித்துப் போய் நின்றாள்.

''பயப்படாதீர்கள். எஜமானுக்கு ஆபத்து ஒன்றுமில்லை. சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்துவிடும்......'' என்று தைரியம் கூறினான் ஒரு போலீஸ்காரன்.

கூட்டம் வெறி கொண்டு கற்களை மழை மாதிரி பொழியவே, கமலவாசகி திகைத்து நின்றாள்.

''என்ன இன்ஸ்பெக்டர், சும்மா நிற்கிறீர்கள்? சீக்கிரம் சுடுங்கள். அப்போது தான் கூட்டம் கலையும். ஏன் இப்படிக் கல் மாதிரி நிற்கிறீர்கள்?'' என்று சீறி விழுந்தாள். துப்பாக்கியால் சுட உத்தரவு கொடுக்க இன்ஸ்பெக்டர் தயங்கினார்.

''சுடவில்லையென்றால் கூட்டம் நம்மை உயிரோடு விடாது'' என்றாள் கமலவாசகி.

''கொஞ்சம் பொறுங்கள். கூட்டம் கலையத் தொடங்கி விட்டது....'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''தடியடி காணாது. சுட வேண்டும். நீங்கள் சுடவில்லையென்றால், நான் கைத் துப்பாக்கியால் கூட்டத்தைச் சுடப் போகிறேன்'' என்று கூறிக் காருக்குள்ளிருந்த கைத் துப்பாக்கியை எடுப்பதற்காகத் திரும்பினாள் கமலவாசகி.

''அம்மா, அம்மா... அப்படி ஏதாவது செய்து விடாதீர்கள். நாங்களே பார்த்துக் கொள்ளுகிறோம்'' என்று பதை பதைப்புடன் கூறிவிட்டு இன்ஸ்பெக்டர் போலீஸ் படையினர் நின்ற பக்கத்தை நோக்கி ஓடினார்.

இதற்குள் கூட்டம் சிவானந்தத்தின் காரை நெருங்கி விட்டது. கமலவாசகியையும் கூட்டம் சூழ்ந்து கொண்டது. கூட்டம் நெருக்கித் தள்ளவே அவளும் நகர்ந்தாள். கூட்டம் அவளைத் தள்ளிக் கொண்டே சந்திப் பிள்ளையார் கோயிலின் தென்புறம் வந்து விட்டது. சிவானந்தம் மயங்கிக் கிடந்த கார் அவள் பார்வையிலிருந்து மறைந்து விட்டது.

கூட்டத்தின் நெரிசலில் கமலவாசகி நகர்ந்து கொண்டிருந்த அதே நேரத்தில் சிவானந்தத்தின் காரை ஒரு போலீஸ்காரன் கூட்டத்திலிருந்து விலக்கிச் சற்று ஒதுக்குப்புறமாக ஓட்டிச் சென்று விட்டான். வசமாகக் கூட்டத்துக்கிடையே அகப்பட்டுக் கொண்டோம் என்ற பீதியினால் கமலவாசகியின் உடல் நடுங்கியது. கூட்டத்திலிருந்த யாரோ ஒரு போக்கிரி குறிபார்த்துக் கமலவாசகி மீது கல்லை எறிந்து விட்டான். தலையிலிருந்து இரத்தம் வழிய மயங்கித் தரையில் சரிந்தாள். இதைப் பார்த்துவிட்ட திரிவேணியும், தீக்ஷிதரும் கமலவாசகியிடம் விரைந்தார்கள். மிகுந்த சிரமத்துடன் கூட்டத்தை விலக்கிக் கொண்டு கமலவாசகியை நெருங்கிய போது, அவள் மயக்கத்திலிருந்தாள். பரபரப்புடன் அவளைத் தூக்கினாள் திரிவேணி.

''சூப்பிரண்டெண்ட் பெண்டாட்டியைத் தீர்த்துக் கட்டுங்களடா. அவள்தான் சுடச் சொல்லி உத்தரவு கொடுக்கிறாள்'' என்று யாரோ கூட்டத்தில் கூறியது, திரிவேணியின் காதில் விழுந்தது. தீக்ஷிதரிடம் திரும்பி, ''இவளை நான் வீட்டுக்குக் கொண்டு போகிறேன். இல்லையென்றால், இவளுக்கு ஆபத்துத் தான். நீங்கள் அத்தையை ஜாக்கிரதையாக வீட்டுக்கு அழைத்து வாருங்கள்'' என்றாள் திரிவேணி மெதுவாக.

''எப்படிப்போவாய்?'' தீக்ஷிதர் கேட்டார்.

''பக்கத்துச் சந்தில் பண்ணையார் கார் நிற்கிறது. அதில் போய்விடுவேன்'' என்று கூறிக் கொண்டே கமலவாசகியைத் தூக்க முயன்றாள்.

இந்தச் சமயத்தில் போலீஸ் துப்பாக்கியால் சுடும் சப்தம் கேட்டது. திரிவேணி ஒருகணம் திகைத்து நின்றாள். பீதியினால் கூட்டம் அலறிச் சிதறியது. திரிவேணிக்குப் பக்கத்தில் நின்ற ஒருவன் அவள் உதவிக்கு வந்தான். இருவருமாகக் கமலவாசகியைத் தூக்கிக் கொண்டு கூட்டத்தைச் சிரமத்துடன் விலக்கிக் கொண்டு பக்கத்துச் சந்தில் நுழைந்தார்கள். அங்கு நின்று கொண்டிருந்த ஒரு காருக்குள் கமலவாசகியைப் படுக்க வைத்தார்கள். கமலவாசகியைத் தூக்கி வந்தவன், மீண்டும் கலவரம் நடக்கும் இடத்தை நோக்கி ஓடிவிட்டான். காரின் சொந்தக்காரர் பண்ணையார் நயினார் பின்னே பரபரப்புடன் திரிவேணியிடம் ஓடி வந்தார்.

''என்னம்மா, என்ன விஷயம்?'' பீதியுடன் கேட்டார்.

''உங்கள் காரில் வீடு வரைக்கும் போக வேண்டும்; அவசரம்'' என்றாள் திரிவேணி. பிறகு காரில் ஏறிக் கொண்டாள். நயினார் பின்னேயே காரை ஓட்டிச் சென்றார். கார், குறுக்குத் துறை வழியாக ஜங்ஷன் வந்து, சிந்துபூந்துறையை அடைந்தது. அவர்களைச் சிந்துபூந்துறை வீட்டில் சேர்த்துவிட்டு நயினார் பின்னே சென்று விட்டார்.

டாக்டருக்குப் ஃபோன் செய்ய ஓடினாள் திரிவேணி. ஃபோனில் பேச முடியவில்லை. ஃபோன் கம்பிகளைப் பல இடங்களில் அறுத்து, தந்திக் கம்பங்களைச் சாய்த்து, காலிகள் நாசம் செய்திருப்பதாக டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலிருந்து தகவல் கிடைத்தது. ஜனக் கூட்டம் இப்படி வெறி கொண்டு நாச வேலையில் இறங்கியிருப்பதை அறிந்து மனம் துடித்தாள் திரிவேணி. ஃபோனைக் கீழே வைத்து விட்டு இடிந்த மனத்துடன் கமலவாசகி படுத்திருந்த கட்டிலுக்குப் பக்கத்தில் வந்தாள்.

''டேய், குமார்! மருந்துப் பெட்டியும், தண்ணீரும் கொண்டு வா'' என்றாள். குமார் உள் பக்கம் ஓடினான். கட்டிலின்

விளிம்பில் உட்கார்ந்தாள் திரிவேணி. படுத்திருந்த கமலவாசகி முனகினாள். கண்களைத் திறந்தாள். சிறிது நேரம் பரக்க பரக்க விழித்தாள். பிறகு தலைப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த திரிவேணியை உற்றுப் பார்த்தாள். திடீரென்று படுக்கையிலிருந்து எழுந்தாள்.

''எழுந்திருக்காதீர்கள்'' என்றாள் திரிவேணி.

''நான் எங்கே இருக்கிறேன்?'' — கமலவாசகி கேட்டாள்.

''எங்கள் வீட்டில்தான். உங்கள் தலையில் அடிபட்டிருக்கிறது.''

''அடிபட்டால் என்ன? என்னை ஏன் இங்கே தூக்கி வந்தீர்கள்?'' என்று கோபத்துடன் கேட்டாள் கமலவாசகி.

''மயங்கி விழுந்து விட்டீர்கள்.''

''செத்தே போகிறேன்; அதைப் பற்றி உங்களுக்கென்ன கவலை?'' என்று இரைந்து கத்திக் கொண்டே கட்டிலிலிருந்து இறங்க முனைந்தாள் கமலவாசகி.

''இப்போது வெளியே போகாதீர்கள்'' என்று கூறிக் கமலவாசகியின் தோள்களைப் பற்றிப் படுக்கையில் படுக்க வைக்க முனைந்தாள் திரிவேணி.

''சீ.... என்னைத் தொட வேண்டாம்...'' என்று சீறிக் கொண்டே 'பளார்' என்று திரிவேணியின் கன்னத்தில் ஓங்கி அறைந்தாள் கமலவாசகி. அடிபட்ட திரிவேணி, கன்னத்தை ஒரு கையால் பொத்திக்கொண்டு பிரமை பிடித்துப் போய் நின்றாள். கட்டிலை விட்டு இறங்கிய கமலவாசகி இரண்டு எட்டு நடந்திருப்பாள்; அதற்குள் மயங்கிக் கீழே சரிந்தாள். தரையில் விழுவதற்குள் அவளைத் திரிவேணி தாங்கிப் பிடித்துக் கொண்டாள். கமலவாசகியைக் கட்டிலில் படுக்க வைத்து விட்டுத் திரும்பிய போது குமார் மருந்துப் பெட்டியோடு நின்றான்.

''குமார், ஓடிப் போய்க் கடையில் காப்பி வாங்கி வா.... ஓடு....'' என்றாள்.

''கடை இன்று கிடையாது அக்கா. எல்லாக் கடைகளையும் அடைத்துவிட்டார்கள்.''

''அடுப்பை மூட்டிக் காப்பி போடேன்.... சீக்கிரம்!'' என்று அவசரப்படுத்தினாள். குமார் அடுக்களைக்கு ஓடினான்.

திரிவேணியின் கன்னத்தில் விரல்கள் பதிந்தது போல் தடிப்புத் தோன்றிவிட்டது. அடிபட்ட இடத்தில் விண்விண் என்று வலித்தது. கன்னம் முழுவதும் இரத்தமாகச் சிவந்து விட்டது. இடது கையால் அடிபட்ட கன்னத்தைத் தடவிக் கொண்டு வலது கையால் கமலவாசகியின் தலைக் காயத்தைக் கழுவித் துடைத்துக் கட்டுப் போட்டாள்.

சிறிது நேரத்தில் குமார் காப்பியுடன் வந்தான். கமலவாசகியின் தலையைத் தன் மடி மீது தாங்கிக் கொண்டு காப்பியை வாயினுள் சிறிது ஊற்றினாள் திரிவேணி. சூடான காப்பி தொண்டைக்குள் இறங்கியதும் கமலவாசகி மயக்கம் தெளிந்து கண்விழித்தாள். பரக்கப் பரக்கப் பார்த்தாள். பிறகு திரிவேணியை உற்றுப் பார்த்தாள். திரிவேணியின் கன்னத்தில் விரல்கள் பதிந்து சிவந்து வீங்கியிருப்பதைக் கண்டு திகைத்தாள்.

''இதைக் குடித்து விடுங்கள். களைப்புத் தீரும்'' என்றாள் திரிவேணி.

''எனக்கு ஒன்றும் வேண்டாம்'' என்று கூறிவிட்டு எழுந்திருக்க முயன்றாள் கமலவாசகி.

''அலட்டிக் கொள்ளாமல் படுத்திருங்கள். உங்கள் வீட்டுக்கு ஆள் அனுப்புகிறேன். கார் வந்ததும் நீங்கள் போகலாம்'' என்றாள் திரிவேணி கனிவுடன்.

கமலவாசகியின் பார்வை திரிவேணியின் கன்னத்தையே சுற்றி வந்தது.

''குமார், போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் இவர்கள் இங்கே இருக்கிறார்கள் என்று சொல்லிவிட்டு வா. ஆபத்து ஒன்றுமில்லை என்று சொல்லு. சைக்கிளில் போ, சீக்கிரம்'' என்று அவசரப்படுத்தினாள் திரிவேணி. சைக்கிளை எடுத்துக் கொண்டு குமார் வெளியே சென்றான்.

ஒரு விசிறியை எடுத்துக் கமலவாசகிக்கு விசிறத் தொடங்கினாள் திரிவேணி. அந்தக் காற்று தீயாகத் தகித்தது. திரிவேணியின் கன்னத்தில் பதிந்திருக்கும் விரல்கள் தன்னுடையவை என்ற நினைவு, கமலவாசகியைச் சுட்டுக் கொண்டிருந்தது. அந்த இடத்தை விட்டு, திரிவேணியின் பார்வையை விட்டு வெகுதூரம் விலகிச் சென்றுவிட வேண்டும் என்று துடித்தாள். ஒரு குற்றவாளியைப் போல் மனம் கூசினாள். கனிவோடு பணிவிடை செய்யும் பண்பின் சிகரத்துக்கு அருகே இருக்கவே கமலவாசகியின் மனம் கூசியது. (தொடரும்)



''வேற ஒன்னுமில்லே, அரிசி கஷ்டமாச்சே...அரிசியை 'வேஸ்ட்' பண்ணாம விருந்துப் பொண்ணுடைய அப்பா செஞ்ச ஐடியா இது!''

## ரசிகர்களின் பரிசு

சென்னை சினிமா ரசிகர்கள் சங்கத்தின் சார்பாக 1966ம் ஆண்டு சிறந்த நட்சத்திரங்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நடிகர், நடிகையர்களுக்குப் பரிசு அளிக்கும் விழா சுகாதார அமைச்சர் சாதிக் பாட்சாவின் தலைமையில் மேகலா சினிமாத் தியேட்டரில் அண்மையில் நடந்தது. அமைச்சர் சத்திய வாணி முத்து பரிசுகளை வழங்கினார். நடிகர், நடிகையர்கள் மற்றும் கலைஞர்களுக்கு வெள்ளிப் பதுமையும், வெற்றிக் கேடயமும் பரிசளிக்கப்பட்டன. சிறந்த நடிகர் — சிவாஜி கணேசன் (படம்: ''செல்வம்''). சிறந்த நடிகை — பத்மினி (படம்: ''சித்தி'') சிறந்த துணை நடிகருக்குரிய பரிசை முத்துராமன் பெற்றார். (படம்: ''மேஜர் சந்திரகாந்த்'') சிறந்த துணை நடிகை—புஷ்பலதா (படம்: ''ராமு'') சிறந்த குழந்தை நட்சத்திரம் — மாஸ்டர் ராஜ்குமார். சிறந்த ஹாஸ்ய நடிகர் என்ற பரிசு நாகேஷுக்கு வழங்கப்பட்டது. சிறந்த டைரக்டராக கே. பாலசந்தர் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் டைரக்ட் செய்த ''மேஜர் சந்திரகாந்த்'' சிறந்த படத்துக்குரிய பரிசைப் பெற்றது. சிறந்த பின்னணிப் பாடகர்: டி. எம். சௌந்தரராஜன்; பின்னணிப் பாடகி — பி. சுசீலா. ஜனாதிபதியின் தங்க மெடல் பரிசு பெற்ற மலையாளப் படம் ''செம்மீனி''ல் நடித்த ஷீலாவுக்குச் சிறந்த மலையாள நடிகைக்கான பரிசு கிடைத்தது. நடிகர் டி. எஸ். முத்தையா பத்து ஆண்டுகளாகத் துணை நடிகருக்குரிய பரிசைத் தொடர்ந்து பெற்று வருகிறார். தெலுங்குப் படக் குழந்தை நட்சத்திரப் பரிசு குட்டி பத்மினிக்குக் கிடைத்தது. சாவித்திரிக்கும் ஜமுனாவுக்கும் சிறந்த தெலுங்குப் பட நடிகைகளுக்குரிய பரிசு கிடைத்தது.

சிறந்த தியேட்டர் என்ற பாராட்டுடன் ஆனந்த் தியேட்டர் பரிசு பெற்றது. சபையர் தியேட்டருக்கு அதற்குரிய சிறப்புப் பரிசு வழங்கப்பட்டது. விழாவில் ஸ்டுடியோ அதிபர்களான ஏ. வி. மெய்யப்பன், ஏ. எல். சீனிவாசன், மற்றும் பல சினிமா நட்சத்திரங்கள் ஆகியவர்களுடன் ஏராளமான ரசிகப் பெருமக்கள் குழுமியிருந்தனர்.

# ஊர் வம்பு

ரசிகைக்கு ஒரு பரிசு



## நகரத்தில் நெல் வயல்!

சென்னை நகரில் கார்ப்பொரேஷன் எல்லைக்குள்ளேயே மூன்று ஏக்கர் நிலத்தில் ஏ. டி. டி. 27 என்ற 105 நாள் குறுகிய கால நெற்பயிரைப் பயிரிட்டு அமோகமான கண்டு முதலும் கிடைக்கும் அதிசயத்தைப் பார்க்க வேண்டுமா? மாம்பலத்துக்கும் சைதாப்பேட்டைக்கும் இடையில் ரயில் பாதையை ஒட்டியுள்ள தேவநாதன் பண்ணைக்குச் சென்றால் இவ்வதிசயத்தைக் காணலாம். ''தேவநாதன் காலனி'' என்ற பெயர்ப்பலகை கண்டு உட்சென்றால் காணப்படுவது வீடுகள் அல்ல; அபரிமித விளைச்சலும் அடர்த்தியான நெற்கதிர்களும், நெல்மணிகளின் பளுவைத் தாங்காது தலைசாய்ந்து விழுந்துள்ள தாள்களும்தான். ஏக்கராவுக்குச் சுமார் முப்பது மூட்டைகள் கிடைக்கலாம் என்கிறார் உரிமையாளர் தேவநாதன். இது சுமார் 2200 கிலோ. இதற்காகத் திரு தேவநாதன் விசேஷமாக எருவோ, ரசாயன உரமோ, பசுந்தழையோ போடவில்லையாம். பூமியின் இயற்கை மண் வளமே இவ்வாறு அமோகமாக விளைவைக் கொடுக்கிறது!

நெல் விளைந்து கொண்டிருந்த பூமியெல்லாம் வெகு வேகமாக வீடு கட்டும் மனைகளாக மாறிக் கொண்டிருக்கும் சென்னையில் ஒருவர், நெல் பயிர் செய்வதை ஆர்வத்துடனும் பெருமையுடனும் மேற் கொண்டிருப்பது பாராட்டத்தக்கதே யல்லவா?

## பேசும் ஓவியங்கள்

உணர்ச்சிகளையும், ஆழ்ந்த கருத்துக்களையும் வார்த்தைகள் மூலம் சொல்ல முடியாத நிலையில் ஓவியங்கள் வாயிலாக அவற்றை ஓவிய நிபுணர் தெரிவிக்கிறார். வர்ணங்களே ஓவியரின் மொழிகள். உருவங்கள் வரைந்தாலும், உருவங்களே இல்லாது வர்ணக் குவியல்களாக இருந்தாலும் ஓவியங்களைப் பார்க்கும்போது, ஓவியர் சிந்தனையில் என்ன கருத்து எழுந்து ஓவியத்தை உருவாக்கிற்றோ, அதே கருத்துப் பார்ப்போர் உள்ளத்திலும்

நெல் வயல்



தோன்றவேண்டும். அந்த அளவுக்கு ஓவியங்கள் பேச வேண்டும்.

இவ்வுண்மையைத் தெரிந்து வைத்துக் கொண்டு ஓவியங்களைக் கண்டு ரசித்துச் சீர்தூக்கிப் பார்ப்பது ஒரு முறை. ஓவியக் கலை நுட்பங்களைத் தெரிந்து கொள்ளாமலே ரசிப்பது இன்னொரு வகை. இவ்விரு வகையில் எப்படி ரசித்தாலும் ஸ்ரீ எச். வி. ராம்கோபாலின் ஓவியங்கள் பாராட்டு பெறுகின்றன. ஏனெனில் அவருடைய ஓவியங்கள் எல்லாம் தாமே பேசுகின்றன.

திரு ராம்கோபால் சுமார் 25 ஆண்டுகளாக இத்துறையில் பணியாற்றி வருகிறார். சிற்பக் கலைஞர் ராய் சௌதுரியிடம் சிற்பக் கலை பயின்ற திரு ராம்கோபால் இப்பள்ளியிலேயே 1948ம் ஆண்டிலிருந்து ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். ராம்கோபாலின் ஓவியங்கள் கெய்ரோ கலை விழாவிலும் ஹங்கேரி, ருஷியா, அமெரிக்கா நாடுகளிலும் நடைபெற்ற இந்தியக் கலைக் காட்சிகளிலும் இடம் பெற்றுப் பாராட்டுக்களைப் பெற்றுள்ளன.

நவீனப் போக்குகளில் அதிக விருப்பம் கொள்ளாத ராம்கோபால், மேல் நாட்டு ஓவியக் கலைஞர்கள் கையாளும் உத்திகளைப் பாரதப் பண்பு கெடாமல் தாமும் மேற்கொள்ளத் தயங்குவதில்லை.

தில்லி வாழ் கலை ரசிகர்கள் கண்டு மகிழ இம்மாதம் 27ந் தேதியிலிருந்து அக்டோபர் 3 வரை புதுதில்லியில் 208, தான்சேன் மார்க்கிலுள்ள ஸ்ரீதரானி கலைக்கூடத்தில் இவரது சித்திரங்கள் காட்சி யாக வைக்கப் படவிருக்கின்றன.

## பின்னி கம்பெனியின் மூன்றாவது விற்பனை நிலையம்

நேர்த்தியான பின்னி ஜவுளி ரகங்களைக் கம்பெனி நிர்ணய விலைக்கு வாங்கித் தங்கள் ஜவுளித் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேணுமா? ''சென்னை நகரத்தில் மவுண்ட் ரோடு ரவுண்ட் டாணா சுரங்கப் பாதைக்கருகில் செப்டம்பர் 6-ம் தேதி முதல் எங்கள் மூன்றாவது 'ஷோ ரூமை'த் திறந்துவைத்துள்ளோம். வாருங்கள்'' என்கிறார்கள் பின்னி கம்பெனியார். பக்கிங்ஹாம் கர்னாடிக் கம்பெனியின் நிர்வாக டைரக்டர் திரு பி. டி. ரைட்லி இந்நிலையத்தைத் தொடங்கி வைத்தார்.

## அஸ்ஸாமியப் பெண்ணின் ஆனந்த நடனம்

ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் ஆசி பெற்று கலாக்ஷேத்திரத்தின் முத்திரையைத் தாங்கிய பரத நாட்டிய நிகழ்ச்சி எங்கு நடைபெற்றாலும் அவற்றில் நான்கு பிரதான அம்சங்களை நிச்சயமாகக் காணலாம். சாஸ்திர சம்பந்தமான பாவ அபிநயங்கள், கலை ரசனை மிளிரும் நடன வகைகள், நடனங்களை நன்கு ரசிப்பதற்கு ஏற்ற மிதமான காலப்பிரமாணம், கர்நாடக சுத்தமான காதுக்கினிய பின்னணி இசை. கலாக்ஷேத்திரத்தின் சொந்த அரங்கிலேயே ஆகஸ்டு 31ந் தேதி நடைபெற்ற குமாரி சுபலக்ஷ்மி பருவாவின் பரதநாட்டிய அரங்கேற்றம் இவ்வகையில் மிகவும் சிறந்த ஒன்று. அஸ்ஸாம் ராஜ்யத்தைச் சேர்ந்த இப்பெண்மணி ஐந்தாண்டு காலம் கலாக்ஷேத்திரத்தில் பரதநாட்டியம் பயின்று ஏற்கனவே பல கலாக்ஷேத்ர நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டிருந்தாலும், அவருடைய முழு நேரத் தனிப் பரதநாட்டிய நிகழ்ச்சியில் அவர் இக்கலையில் பெற்றுள்ள முழுமையை நன்றாகக் காண முடிந்தது.

பட்டம் பெற்றுக் கலாக்ஷேத்திரத்தை விட்டுச் செல்லவிருக்கும் குமாரி சுபலக்ஷ்மி பருவாவின் நடனங்கள் வருங்காலத்தில் மேலும் பரிமளிக்குமென்று எதிர்பார்க்கலாம்.


பின்னி நிலையம்


பேசும் ஓவியம்


ஆனந்த நடனம்

# பாதுகை

## ர. வேங்கடரத்தினம்

### முதல் நாள்

மூன்று மாதங்களாகவே வீடு, போட்டது போட்டபடி இருந்தது. ஒரு சாமானும் உரிய இடத்தில் ஒழுங்காக வைக்கப்படவில்லை. பழைய பேப்பர் குப்பலாக வேறு குவிந்து கிடந்தது. டெலிபோனின்மேல் படிந்திருந்த அழுக்கும் தூசியும் கூட அப்படியே இருந்தன. திரைச்சீலையெல்லாம் கூட அழுது வடிந்தது.

மேசையில் புத்தகங்களின் மேல் புழுதிப் படலம் படிந்து கிடந்தது. எல்லாவற்றையும் தட்டித் துடைத்து வைக்கலாம் என்று வீட்டு எஜமானி கிளம்பினாள். கூடத்து அலமாரியின் மீது அவளது கவனம் சென்றது. அதில் சொல்லி வைத்தாற்போல் முதன் முதலில் கண்ணிற் பட்டது அந்த ஒரு ஜோடிச் செருப்பே. பளபளப்புடன் கண்களைப் பறித்தன அந்தப் பட்டுச் செருப்பு இரண்டும்.

அவற்றைக் கையில் எடுத்தாள். கண்களில் விறுவிப் போதில் சரம் கசிந்து, பெருகி, வளர்ந்து, முத்தாலி மாறிக் கீழே உதிர்ந்தது. புடவைத் தலைப்பினால் அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். தன்னையறியாமல் ஒரு பெருமூச்சும் வெளிவந்தது. அந்த ஓசை கேட்டுத்தானோ என்னவோ, மூர்த்தி ராவும் அவள் இருந்த புறம் வந்தார்.

''கங்கு, அதை ஏன் இப்ப எடுக்கறே? கண்ணைத் துடைச்சிக்கோ.''

கங்குபாய் விம்மலானாள். இரண்டு செருப்பையும் கண்ணில் ஒற்றிக் கொள்கிறாற்போல விழிகளின் அருகே கொண்டு சென்றாள்.

''நீ அதை உள்ளே வச்சு மூடிட்டு வர மாட்டே?'' எனக் கடிந்துகொள்ளும் குரலில் மூர்த்தி ராவ் மொழிந்தார்.

கங்குபாய் செருப்பு இரண்டையும் அலமாரியில் வைத்தாள். கதவைச் சாத்தினாள். ஒருமுறை கதவைத் திறந்து அவற்றை நோக்கினாள். மீண்டும் ஒரு பெருமூச்சு.

''எந்த வேளையிலே வாங்கினேனோ! குழந்தையையே விழுங்கிடுத்து இந்தப் பாழும் செருப்பு!''

கேட்டு, மூர்த்தி ராவ் ஒரு கணம் பொறி கலங்கிப் போனார்.

சமாளித்துக் கொண்டு பேசினார்: ''செருப்பு என்னத்தைப் பண்ணும்? நாம் கொடுத்து வச்சது அவ்வளவுதான்!''

கங்குபாய் பேசவே யில்லை.

''எவ்வளவோ ஆசையோடுதான் வாங்கினேன். காஷ்மீர் வெல்வெட்டுன்னு சொன்னான் எக்ஸிபிஷன்லே. உடனே நம்ம விட்டலுக்கு நன்னா இருக்குமேன்னு நெனச்சு, வாங்கினேன். இப்படி ஆகும்னு கண்டேனா?''

அவர் குரலும் கம்பியது.

இரு நிமிட நேரம் மௌனம்.

''வைரத் தோட்டுக்கும் முத்து மாலைக்கும்தான் தோஷம் எல்லாம் பார்ப்பா. நம்ம அதிர்ஷ்டம், செருப்பு கூட இப்படி உசிரைக் குடிச்சுடும்னு நினைக்கலியே!''

மூர்த்தி ராவ் கங்கு பாயின் அருகே சென்று நின்றார். உற்று அவரும் அந்தச் செருப்புக்களைப் பார்த்துக் கொண்டே நின்றார் ஒரு கணம்.

''இப்படிக் கொடு என்கிட்டே.''

''என்ன பண்ணப் போறேள்?''

கங்குபாய் அவற்றை அவரிடம் தந்தாள்.

''நாம் இதைப் பார்த்துக் கண்ணீர் விட்டுண்டே இருக்க வேண்டாம்.''

அவர் என்ன செய்யச் சொல்கிறார் என்று கங்குபாய் வியப்புடன் விசாரித்தாள்: ''விட்டல் விட்டுப் போனதை நம்மால் விட முடியுமா?''

''வேலைக்காரிகிட்டே கொடுத்திடு. அவள் குழந்தை போட்டுக்கட்டும்.''

கங்குபாய்க்குச் சம்மதம்தான். ''ஆமாம். அவள் பிள்ளைக்குச் சரியாக இருக்கும். விட்டலே ஒத்தவன்தான் அவனும். மத்தியானம் வருவா, வேலைக்காரி. கொடுத்துடறேன் அவகிட்டே.''

செருப்பு இரண்டையும் உள்ளே வைத்து அலமாரியின் கதவை ஓங்கி அறைந்தாள்.

### இரண்டாம் நாள்

வேலைக்காரி தலையைச் சொறிந்து கொண்டே நின்றாள். ''அம்மா'' என்ற அழைப்பும் உடன் வந்தது. அவள் கையைக் கவனித்த கங்குபாய், ''என்னடி, திருப்பிக் கொண்டுவந்துட்டயா செருப்பை?'' என்று கேட்டாள். அவள் குரலில் ஒரு வியப்பும் திகைப்பும் குடிகொண்டிருந்தன.

''இல்லீங்கம்மா!'' வேலைக்காரி மென்று விழுங்கினாள்.

''இல்லையாவது? கொடுத்ததைக் கொண்டு வந்துட்டியே.''

''ஆமாங்க.''

''என்னடி ஆமாம்? வேண்டாம்னு கொடுத்திடு. ஏதோ உன் பிள்ளைதான் போட்டுக் கட்டுமேன்னு நெனைச்சுக் கொடுத்தா, நீ வேண்டாம்கறே.''

வேலைக்காரி பேசவில்லை.

''பதினெட்டு ரூபாய் போட்டு ஐயா, ஊட்டமேத்து வாங்கிண்டு வந்தது. வீணாக்க வேண்டாமேன்னு நெனைச்சு, உன்கிட்டே கொடுத்தா, நீ அதைத் திருப்பிக்கொடுக்கறே. ரொம்ப நல்லதாப் போச்சு. எங்க விட்டல் ஞாபகார்த்தமாக இருந்துட்டுப் போகட்டும்.'' இவ்வாறு கூறும்போது கங்குபாய்க்கு அழுகையே வந்து விட்டது.

வேலைக்காரி கையைப் பிசைந்து கொண்டே தரையைப் பார்த்தவாறு நின்றாள். ''அம்மா, கோவிச்சுக்கக் கூடாது. என்னவோ மனசு கேக்கலீங்க. இல்லாட்டித் திருப்பி எடுத்தாந்திருக்க மாட்டேன்.''

''மனசு கேக்கறத்துக்கு என்ன வந்துப் புடுத்து? இஷ்டம் இல்லாட்டி எடுத்துக்க வேண்டாம். வீண் பேச்செல்லாம் எதற்கு?''

''அம்மா திருப்பித் திருப்பிக் கோபப் படறீங்களே'' என்று வேலைக்காரி எதையோ கூறத் தவித்தாள். கூறவும் நா எழவில்லை.

''ஆமாண்டி, பின்னே என்ன? நீ இத்தனை வருஷமா நம்ம வீட்டிலே வேலை செய்யறியேன்னு உன்கிட்டே தந்தா, நீ மனசு கேக்கலேன்னு திருப்பிக் கொடுக்கிறே. இதற்கு என்ன அர்த்தம்?''

வேலைக்காரி பேசவில்லை.

''இந்தச் செருப்பிலே ஒட்டிண்டிருக்கா ஏதாவது? ஏதோ எங்களுக்குத்தான் கொடுத்து வைக்கலே. செருப்பைப் போட்டவேளை, காலிலே கட்டி புறப்பட்டு, இரண்டே நாளிலே குழந்தையைக் கொண்டு போயிடுத்து!'' அழலானாள் கங்குபாய்.

வேலைக்காரிக்கு எசமானியம்மாளின் அழுகை மனத்துக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. ''எம்மா, நம்ம விட்டல் ராசா போனத்துலே எனக்கெல்லாம் துக்கம் இல்லீங்களா? அது போய் ரெண்டு அமாசிக்கு நான் தூங்கியிருப்பேனும்மா?''

''அதெல்லாம் எனக்குத் தெரியுண்டி. உனக்கு இந்தச் செருப்பை உன் பிள்ளைக்குப் போடறதுக்கு இஷ்டம் இல்லே!''

''என்னங்கம்மா இப்படி நெனைக்கிறீங்க?''

''ஆமாம், பின்னே என்ன நினைக்கணும்? உன் பிள்ளை மேலே ஆசை இல்லாமையா உன்கிட்டே கொடுத்தேன் இதை?'' வெடுக்கென்று பிடுங்கிச் செருப்பு இரண்டையும் அலமாரியில் வைத்தாள் கங்குபாய்.

''சரி, போய்ச் சேர். இன்னும் ஏன் நிக்கறே?''

''அம்மாவுக்கு இன்னிக்கு என் மேலே நல்லாக் கோபம்!''

''தெரியுண்டி உன் பேச்செல்லாம்.''

வேலைக்காரி நகர்ந்துவிட்டாள்.

''அதோ, அந்த மரத்தடியிலே இருக்காளே, அந்தப் பிச்சைக்காரிகிட்டேக் கொடுத்தாக்கூட, இல்லியமா வாங்கிப்பா. நீ தெரிஞ்சவளா இருக்கியேன்னு கொடுத்ததுக்கு நல்ல மரியாதை வச்சே!''

இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த மூர்த்தி ராவ் அங்கு வந்தார்.

''சும்மா ஏன் புலம்பறே? அவனுக்கு அது வேண்டாம்.''

''ரொம்ப நல்லதாப்போச்சு! நம்ம விட்டல் போட்டுண்டதுன்னு சொல்லி ஆயிசுக்கும் வச்சுப் பூஜை பண்ணத் தயார் நான்.''

''சரி, விடு'' இவ்வாறு அவர் கூறி முடிப்பதற்கும், வெளியே இருந்து ''எதை மாமா?'' என்று கேட்டுக் கொண்டே புதிய குரல் வருவதற்கும் சரியாக இருந்தது. மூர்த்தி ராவ் திரும்பினார். தொள தொளவென்று தாத்தா சட்டை ஒன்றை அணிந்துகொண்டு வைத்தி வந்திருந்தான். அவனுக்கு எங்கும் செல்லுவதற்கு உரிமை உண்டு. ஊர் முழுதும் அவனை அறியும். வீதியில் சிறுவர் பட்டாளத்துக்குத் தலைவன் அவன். வீட்டினுள் பெரியவர்களுக்குப் பிடித்த 'பையன்'!

''வா, நீதான் பாக்கி இந்த வீட்டுக்கு!'' அவனை மூர்த்தி ராவ் வரவேற்றார்.

''வாடா வைத்தி! ஒண்ணும் தெரியாத குழந்தை அவன். அவனை ஒண்ணும் சொல்லாதேங்கோ.'' வைத்தியின் மீது என்றுமே கங்குபாய்க்கு ஒரு பரிவு உண்டு.

''இன்னிக்குக் குப்பைத் தொட்டி ஒண்ணையும் தோண்டலையாடா வைத்தி? சட்டையெல்லாம் கொஞ்சம் நீட்டா யிருக்கே?'' மூர்த்தி ராவ் இப்படிக் கேட்டது அவனை நையாண்டி செய்வதற்காக அல்ல. அவர்க்கும் அவனோடு பேசுவதில் ஓர் ஆசை உண்டு.

''ஆமாம், மாமா, குப்பைத் தொட்டியிலே இன்னும் இறங்கல்லே.''

''வைத்தி, இங்கே வாடா'' என்று அவனை அருகே அழைத்து உட்கார வைத்து, கங்குபாய் கேட்கலானாள்: ''ஏண்டா, வைத்தி! இவ்வளவு சமத்தா இருக்கியே. குப்பையெல்லாம் ஏன் போய்க் கிளறிண்டு உட்கார்ந்திருக்கே சில சமயத்திலே!''



வைத்தி நொடிப் போதிலே பதில் சொன்னான்: "இல்லாட்டா நான் வைத்தியம்கிறது உங்களுக்கெல்லாம் எப்படி மாமி தெரியும்?"

"போடா, பைத்தாரா, சமத்தா இரு இனிமே."

"சரி, மாமி" என்று கிளம்பியவன் கூடத்து அலமாரியைத் திறந்து அங்கேயே நின்றுவிட்டான். "அடி சக்கை, பொடிமட்டை" என்று உரக்கக் கூவிய அவன், "இது எனக்கு மாமி" என்று செருப்பு இரண்டையும் எடுத்துக்கொண்டு கிளம்பலானான்.

"உனக்கு எதுக்குடா கண்ணு?" வைத்தியைப் பரிவுடன் பார்த்த கங்கு இப்படி மழுப்பிச் செருப்பை வாங்கி உள்ளே வைத்தாள்.

## மூன்றாம் நாள்

**ப**ங்களாவில் வேலையெல்லாம் முடித்துக்கொண்டு வெளியே வந்த வேலைக்காரிக்கு முதன் முதலில் கண்ணில் பட்டது மரத்தடிப் பிச்சைக்காரியின் மகனின் தோற்றம். ஏனென்றால் அவன் கால்களில் அணிந்திருந்த பட்டுச் செருப்புக்கள் கண்ணைப் பறித்தன.

வேலைக்காரி நேரே நடந்தாள்.

"இங்கிட்டு வா, புள்ளே!" என்று பிச்சைக்காரியைச் சற்று அப்பால் அழைத்துச் சென்றாள்.

"இந்தக் கால்மிதி ஏது உன் புள்ளைக்கு?"

ஒரு நொடி அந்தப் பிச்சைக்காரி கலங்கிப் போனாள்.

"ஏன்?"

"சொல்லு, புள்ளே. உனக்கு எங்கிட்டு அம்பிட்டுது இது?"

"எல்லாம் அந்த ராயர் பங்களா அம்மா கூப்பிட்டுக் கொடுத்ததுதான்."

வேலைக்காரிக்கு விளங்கியது.

"நான் சொல்றேனேன்னு நெனைக்காதே. உன் புள்ளே நல்லா இருக்கோணுமின்னு நெனைப்பிருந்தா, மரியாதையா அந்தச் சோட்டை எடுத்தெறி. வேணும் உனக்கது."

"ஏனும்? நல்லாத்தானே இருக்குது?"

"ஜாடாக் கதையும் சொல்றேன். நீ முதல்லே எடுத்து விட்டெறி."

பிச்சைக்காரி பயந்துவிட்டாள்.

"நான் அவங்க பங்களாலே வர்சக் கணக்கா வேலை செய்யறேன். எனக்குக் கொடுக்காமே உனக்குத் தூக்கி கொடுத்திடுவாங்களா இம்மாம் நல்ல செருப்பை? நீ துளியாச்சும் நெனச்சுப் பாத்தியா?"

"என்ன ஆயா, நீ பாட்டிலே பேசிக்கிட்டே போறே? எனக்கு ஒண்ணும் விளங்கல்லியே?"

வேலைக்காரி நாலே வாக்கியத்தில் விளக்கி விட்டாள்: "அந்த அம்மாவோடே ஒரே மகனுக்கு ஐயா வாங்கியாந்த செருப்பு இது. போட்ட ரெண்டே நாளிலே கால்லே கட்டி வந்துச்சு. அம்பிட்டுத்தான்! பெரிய பெரிய டாக்டரெல்லாம் கார்போட்டிட்டு வந்து பாத்தாங்க. குளந்தை பொக்கினு போயிரிச்சு."

பிச்சைக்காரி உணர்ச்சியோடு, "அப்பாலே?" என்றாள்.

"அப்பாலே என்ன? அந்த அம்மா இந்தச் செருப்பை எனக்குக் கொடுத்திச்சு. நான் வேணான்னிட்டேன். இப்ப, உன் புள்ளைக்குக் கொடுத்திருக்குது."

பிச்சைக்காரி மகனைக் கூப்பிட்டாள். செருப்புக்கள் இரண்டையும் 'சரக்'கென்று கழற்றி வீசி எறிந்தாள்.

"உனக்கு மூளை இருக்கா? நடு ரோட்டிலே போடுறியே. அந்த அம்மா எங்களுச்சும் பாத்து வெக்கும். குப்பைத் தொட்டிக்குள்ளாறப் போடு" என்றாள் வேலைக்காரி.

ஒரு குழந்தையின் உயிரைக் காப்பாற்றிய பெருமை அவள் முகத்தில் ஒளி விட்டது.

## நான்காம் நாள்

**மூ**ர்த்தி ராவ் எங்கோ கிளம்பிக் கொண்டிருந்தார். காரில் வந்து அமர்ந்து கதவைச் சாத்தினார்.

"எங்கே மாமா போறேள்?" — கேட்டது வைத்திதான்.

சீட்டில் அமர்ந்த டிரைவர், "வண்டியை எடுக்கட்டுங்களா?" எனக் கேட்கவே, மூர்த்தி ராவ், "உள்ளே மாமி இருக்கா. நீ போய்ப் பேசிண்டிரு" என்று வைத்தியிடம் கூறினார். வண்டி புறப்பட்டது. "டாட்டா பிர்லா டால்மியா, சேமியா" என்று கத்திக் கொண்டே வைத்தி உள்ளே சென்றான். அவன் 'டாடா' சொல்லும் முறை இது!

"மாமா எங்கே போறா மாமி?" என்று கங்குபாயின் அருகில் சென்று விசாரித்தான்.

"சத்சங்கத்துலே கதை நடக்கிறது. மாமா தான் தலைமை வகிக்கிறா. நீயும் வேணாப் போயேன்" என்று கங்குபாய் கூறவே, அவனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. "அடி சக்கை, பொடிமட்டை" என்று கூவினான்.

"என்ன கதை மாமி இன்னிக்கு?"

"உனக்குப் புரியுமோடா சொன்னா? பாதுகா பட்டாபிஷேகம்னுத் தெரியுமா?"

"தெரியாதே."

"அதுதான் கதை. நீயும் போய்க் கேளேன்."

"ரொம்ப சரி" என்று அங்கிருந்து ஓர் ஓட்டம் பிடித்தான் வைத்தி. நேரே கதை நடக்கிற இடத்தில் போய்த்தான் நின்றான்.

அங்கே மூர்த்திராவ், பலரும் புடைசூழ நின்றுகொண்டிருந்தார். "மாமா, நான் வந்தாச்சு. குட்மார்னிங்!"

மூர்த்தி ராவ் புன்முறுவலுடன் பேசினார். "நீ சமத்தா இருக்கணும். நடுவிலே எழுந்திண்டு போகப்படாது. அப்படிப் போறதா இருந்தா ஓசைப்படாமெ நழுவிடணும்.... என்ன, தெரிஞ்சுதா?"

"வெரி குட்!"

கதை ஆரம்பமாகி வளர்ந்தது: கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த வைத்தி, ஆவேசம் வந்தாற்போலக் கூத்தாடி, "பரத மகாராஜாவுக்கு ஜே" என்று கத்தினான். "எல்லோரும் சொல்லுங்கோ" என்று வேறு அறைகூவல் விடுத்தான். சுற்றிலும் அமர்ந்திருந்த வாண்டுப் பயல்கள் எழுந்து கொண்டனர்.

"ராமர் பாதுகைக்கு ஜே" என்று முழக்கினான் வைத்தி.

பையன்கள் ஒருமிக்கக் குரல் கொடுத்தனர். எங்கும் ஒரே களேபரம். கதை சொல்லுபவர் விழித்தார். மூர்த்தி ராவின் முகம் அசடு வழிந்தது. 'இது கங்குபாய் பண்ணின வேலை. அவள்தான் இவனை இங்கே அனுப்பியிருக்க வேண்டும்' என்று முணு முணுத்தார்.

கதை அரை குறையாக முடிந்தது.

## ஐந்தாம் நாள்

கங்குபாய் மாடி சன்னல் வழியே வீதியைப் பார்த்துக் கொண்டு நின்றவள், ''கொஞ்சம் இங்கே வாங்கோளேன்'' என்று திடீரென அழைத்தாள். அலறிப் புடைத்துக் கொண்டு ஓடிவந்த மூர்த்தி ராவ் என்ன என்று திகைப்புடன் வினவினர்.

''அதப் பாருங்கோ, குப்பைத் தொட்டிக் கிட்டே. அது நம்ம வைத்திதானே?''

மூர்த்தி ராவுக்குக்கோபம் முட்ட வந்தது.

''அவன் பேச்சை இனிமே என்கிட்டே எடுக்காதே. போதும், நேத்திக்கு நான் அவமானப்பட்டது. பாதிக் கதையிலே கலாட்டாப் பண்ணி மானத்தை வாங்கிட்டான்.''

கங்கு கெஞ்சினள்: ''கொஞ்சம் டிரைவரை அனுப்பிக் கூப்பிட்டிண்டு வரச் சொல்லுங்கோளேன், நான் பாத்துக்கறேன்.''

''ஏன், இப்ப என்ன வந்துடுத்து?''

''குப்பைத் தொட்டிக்குள்ளே இறங்கி நோண்டிண்டிருக்கான். எனக்கே வயத்தெரிச்சல் தாங்கல்லே. நான் புத்திமதி சொல்லி யனுப்பறேன். கேட்பான்.''

மூர்த்தி ராவ் ''நீ எக்கேடு கெட்டுப் போ'' எனக் கூறிவிட்டு ஒதுங்கினர். கங்குபாய் ஆள் அனுப்புவதற்குள் வைத்தி அப்பால் சென்றுவிட்டான். கங்குபாயும் கைக் காரியமாய் அடுக்களையில் ஒன்றிவிட்டாள். ஒரு மணிப் போது கழிந்திருக்கும் — வீதியில் பெரிய ஊர்வலம் வரும் ஓசை கேட்டது. 'ஜே' கோஷம் இடி முழக்கம் போல் ஒலித்தது. கங்குபாய், ''என்னவோ ஊர்வலம் வராப்பலே இருக்கு'' என்று கணவருக்கும் சொல்லிவிட்டு, நேரே மாடிப் படி ஏறினள்.

ஆம், பிரும்மாண்டமான ஊர்வலம். ஊர்ப் பையன்கள் அவ்வளவு பேரும் இருப்பார்கள் போல் இருந்தது. கங்குபாய் கண்களை அகல விரித்துப் பார்த்தாள். திடீரென்று அவளுடைய கண் விழிகள் குத்திட்டு நின்றன. ஆம். நடுக் கூட்டத்தில் அவளுடைய கண் மணி விட்டுச் சென்ற பட்டுச் செருப்புக்கள் இரண்டும் நன்றாகத் தெரிந்தன. ஒருமுறைக் கிருமுறையாக அவள் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டு பார்த்தாள். செருப்புக்கள் இரண்டும் ஊர்வலத்தில் நகர்ந்து கொண்டிருந்தன. கங்குபாயின் இதயம் இனம் புரியாத இன்ப உணர்ச்சியில் விம்மித் தணிந்தது. கூர்ந்து கவனித்தாள். அந்தச் செருப்புக்கள் இரண்டையும் வைத்தி தன் தலை மீது ஏற்றி வைத்துக் கொண்டு ஊர்வலத்தில் நடந்து முன்னேறிய வண்ணம் இருந்தான். கங்குபாயின் கண்களில் ஒரு கணம் ஆனந்தக் கண்ணீர்!

கூட்டம் அருகே வந்து தாண்டிக்கூடச் சென்றுவிட்டது. சிறுவர்களின் முழக்கம் காதைத் துளைத்தது.

''ராமர் பாதுகைக்கு ஜே!''

''பரத மகாராஜாவுக்கு ஜே!''

''திருமால் திருவடிக்கு ஜே!''

தெருவெல்லாம் ஒரே பேரிரைச்சல். கங்குபாய் வைத்தியின் அதிசய ஊர்வலத்தைக் கண்டு திகைப்பில் திணறிவிட்டாள். வைத்த கண் வாங்காது ஊர்வலத்தைப் பார்த்துக் கொண்டு நின்றவளுக்கு வீட்டின் செருப்பு வைத்திக்கு எப்படிக் கிடைத்தது என்று வேறு வியப்பு!

கங்குபாயின் கண்ணெதிரிலிருந்து ஊர்வலம் மறைந்து, தெரு முக்குத் திரும்பியது. ஜன்னலை விட்டு மீண்டும் அடுக்களைக்கு வந்தாள் கங்குபாய்.

திடீரெனத் தெருவில் ஒரு பதற்றம்! படபடப்பு. நாலைந்து பேர் தலைதெறிக்க ஓடினர்கள். டிரைவர், மூர்த்தி ராவிடம் வந்து ஏதோ சொன்னன். ''நிஜமாவா?'' என்றார் ராவ். ''அப்படித்தான் தெருவிலே சொல்லிக்கிட்டு ஓடறாங்க'' என்றான் டிரைவர்.

''வண்டியை எடு!'' என்று டிரைவருக்கு உத்திரவு இட்டவர், ''கங்கு, நீயும் வரயா? வைத்தி மேலே லாரி ஏறிடுத்தாம்!'' என்று கங்குவையும் ஏற்றிக் கொண்டு கிளம்பினர். தெரு முனையில் ஊர்வலம் திரும்பும்போது நல்ல நெரிசல். சரியான கூட்டம். லாரி டிரைவர் ஒழுங்காக ஹாரன் அடித்துக் கொண்டு தான் வந்தானும். மற்றப் பையன்கள் எல்லோரும் அப்படி இப்படி ஒதுங்கிவிட்டார்களாம். பாவம், வைத்தி மட்டும் ஆவேசம் வந்தாற்போல் கண் மண் தெரியாமல் கத்திக் கொண்டு வந்தவன், பரதனுக்கும், பாதுகைக்கும் ஜே போட்டுக் கொண்டு வந்த உற்சாகத்தில் லாரியின் அடியில் சிக்கிச் செத்துக் கிடந்தான். சற்றுத் தள்ளி, தரையில் பட்டுச் செருப்புக்கள் இரண்டும் பளபளவென்று கண்ணைப் பறிக்கிறாற்போலக் கிடந்தன. கூட்டத்தில் இருந்த பிச்சைக்காரி, ''இந்தப் பாழும் செருப்பு ரெண்டாவது உசிரையும் வாங்கிருச்சே!'' என்றது கங்குபாயின் காதிலும் விழுந்தது.



## சொன்னது யாரோ?

ஒரு சமயம் சரோஜினி தேவி காந்திஜியிடம் ''ஏழைகளிடம் ஆண்டவன் ரொட்டி வடிவத்தில் வருகிறுன் என்ற பொன்மொழியை யார் சொன்னது, சொல்லுங்கள் பார்க்கலாம்'' என்றார்.

காந்திஜி அதைக் கேட்டுத் தீவிரமாகச் சிந்தித்துப் பார்த்தார். அந்தப் பொன்மொழி அவருக்கு மிகவும் தெரிந்ததாகத் தோன்றியதே தவிர, அதைக் கூறியவர் யார் என்பது புலப்படவில்லை. ''எனக்கு நினைவுக்கு வரவில்லை. நீயே சொல்லி விடேன்'' என்றார் காந்திஜி.

''சொல்லட்டுமா? தாங்கள்தான் அதைச் சொன்னது'' என்றார் சரோஜினி தேவி.

—விஜய்



## கண் கண்ட தெய்வம்

கிராமத்தில் மிராசுதார் வாழ்க்கையின் சுவாரஸ்யமான சம்பவங்கள் வெகு அழகாகப் பின்னப்பட்டிருக்கின்றன. மூத்த சகோதரருக்கு ஓய்வு தர எண்ணி இளையவன் முத்துசாமியும், அவன் மனைவியும் சேர்ந்து மேற்கொள்ளும் நடவடிக்கைகளும், அதன் விளைவுகளும் படத்தில் சுவைத்துப் பார்க்க வேண்டிய பகுதிகள்.

எஸ். வி. ரங்காராவ் அண்ணன்; எஸ். வி. சுப்பையா தம்பி. ரங்காராவ் தம்பியிடம் பேசாமல் அவன் மனைவி அன்னத்திடம் அவனைப் பற்றிப் பேசும் தோரணையே சுவாரஸ்யமாயிருக்கிறது.

சுப்பையா நாணிக் கோணிக்கொண்டு அண்ணனிடம் காட்டும் மரியாதை ஒன்று போதும். மனைவி அன்னத்தினிடம் பேசும் போதும், பிள்ளைகள் பரீட்சையில் தவறிப் போனதை அறிந்து சீறிச் சினந்தபோதும் அவர் நடிப்பின் சிகரத்தையே எட்டிவிடுகிறார்.

நான்கு குழந்தைகளுக்குத் தாயாராக வரும் பத்மினி செயற்கையான கவர்ச்சியைக் காட்டிப் படத்தின் தரத்தைக் கெடுக்காமல், கௌரவமுள்ள ஒரு மிராசுதார் வீட்டு மருமகளாக வந்து மிகவும் இயல்பாக நடித்திருப்பது பாராட்ட வேண்டிய அம்சம்.

நாகேஷ் வக்கீலாக வந்து மிகவும் நன்றாக வாதாடுகிறார். உணர்ச்சி ததும்பப் பேசி உருக்கமாக நடிக்கிறார். நல்ல மாறுதல்!

கதை, வசனம் இரண்டையும் அருமையாக அமைத்துத் தந்த கே. எஸ். கோபால கிருஷ்ணன் படத்தை சிறப்பாக டைரக்டும் செய்திருக்கிறார். திரைக்கதையில் வரும் பாத்திரங்களுக்கு ஏற்ற நடிகர்களைத் தேர்ந்தெடுத்திருப்பது படத்தின் வெற்றிக்கு மூலகாரணம்.

---

வெள்ளித் திரை - வெள்ளித் திரை - வெள்ளித் திரை - வெள்ளித் திரை

---

## காவல்காரன்

மோசக்காரர்களின் பாசறையில் நடக்கும் நாசவேலைகளைக் கண்டறிந்த போலீஸ் அதிகாரி சுட்டுக் கொல்லப்பட்ட மர்மத்தைத் துப்புத் துலக்க முற்பட்ட இரகசியப் போலீஸ் அதிகாரியின் கதைதான் "காவல்காரன்". வெறுமனே துப்பு மட்டும் துலக்கியிருந்தால் அதில் சுவாரஸ்யம் இருந்திருக்காது. மோசக்காரர்களுக்கு விலங்கிட முயன்றவருக்கு ஓர் அழகியின் நேசக் கரமும் கிடைக்கிறது. அப்புறம் கேட்க வேண்டுமா? படம் குதியாய்க் குதித்துக் கொண்டு ஓடுகிறது.

குத்துச் சண்டை வீரராகத் தோன்றிக் குதித்துக் குதித்துச் சண்டையிடும் லாகவத்திலிருந்து இறுதியில் உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடித்து விலங்கிடுகிற கடைசிக் காட்சி வரை எம்.ஜி.ஆர். எம்.ஜி.ஆர்.தான்.

தாய்மைப் பேற்றை எய்திய மகிழ்ச்சியையும் நாணத்தையும் ஜயலலிதா நன்கு வெளிப்படுத்துகிறார்.

நம்பியாரின் நடிப்பில் புதுமெருகு சேர்ந்திருக்கிறது.

டாக்டர், நர்ஸ், நோயாளி ஆகிய மூன்று பாத்திரங்களையும் ஏற்று நாகேஷ் சக்கைப் போடு போடுகிறார்.

சிவகுமார் திரைக் கதையின் திருப்பத்துக்கு மிக மிக முக்கியமானவரென்றாலும் அவருக்குப் போதிய சந்தர்ப்பம் இல்லை.

திரைக் கதை விறுவிறுப்புடையது. குழப்பம் இல்லாமல் அமைத்திருப்பது பாராட்டுக்குரியது. வே. லட்சுமணன் அழகாக வசனம் எழுதியிருக்கிறார்.

"நினைத்தேன் வந்தாய்" என்ற பாட்டு எல்லாரையும் மீண்டும் பாடவைக்கும் பாட்டு. "அடங்கொப்புரானை சத்தியமா நான் காவல்காரன்", "காது கொடுத்துக் கேட்டேன்" என்ற பாடல்கள் பாடப்படும்போது கொட்டகை அமர்க்களப்படுகிறது.

வழக்கமான கோர்ட்டு சீன் தவிர்க்கப்பட்டு, போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் விசாரணையை நடத்தியிருப்பது மாறுதலோடு ஆறுதலையும் தருகிறது.

"காவல்காரன்" சிக்கலில்லாத பல திருப்பங்கள் கொண்ட பொழுதுபோக்குப் படம்.



# உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜேய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. விலை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினாத் தாளுறை தரித்தது ஜேய் ஒன்றுதான்.

ஜேய்—நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

## ஜேய்

அழகு சோப்

உங்கள் மனங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
தயாரிப்பு

235A TM.



# மூன்றாவது பரிசு நாவல்

## அத்தியாயம் 26

சிறிது நேர அமைதிக்குப் பின் கோதண்டராமன் மீண்டும் தொடர்ந்து பேசலானார்:

"இத்தனை நாட்களாக ஈரமில்லாத நெஞ்சோடு, எனக்கு நான்தான் சொந்தம் என்ற திமிரிலே இருந்து விட்டேன். ஆனால் இனி மேல் நான் இருக்கப் போறது, மாசக் கணக்கோ, நாள் கணக்கோ. டாக்டரே சொல்லி விட்டார், இரண்டாவது 'ஹார்ட் அட்டாக்' வராமல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்று...."



தன் கணவனுடைய மரணத்தை நினைத்துத் தன்னுள் புலம்பிக் கொண்டிருந்த பாகீரதியால், அந்த மரணத்துக்குக் காரணமாக இருந்தவருடைய சாவைப் பற்றி நினைத்துப் பார்க்க முடியவில்லை. கோதண்டராமனின் சாவுக்கும் தனக்கும் எந்தவிதமான சம்பந்தமுமில்லை என்று அவள் நினைத்தாள்.

"...ஆனால் நம் கையில் ஒன்றும் இல்லை என்கிற ஞானோதயம் மனுஷனுக்கு அந்தி காலத்தில்தானே உண்டாகிறது..? அது போல எனக்கும் இப்போதுதான் பிறந்திருக்கிறது. நாளைக்கு என் போட்டோவும் பெயரும் பேப்பரிலே வந்தாலும் அதில் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. ஆனால் அதற்குள்ளே என் மனசை நான் சுத்தப்படுத்திக் கொள்ளப் பார்க்கிறேன். பிராயச்சித்தம் ஒன்றினால்தான் மனுஷனுடைய தீச்செயலின் கோர பலன்களையெல்லாம் நீக்க முடியும் என்று யாரோ சொல்லியிருந்ததை நான் செய்து பார்க்கிறேன்..."




கோதண்டராமன் நிறுத்தினார்...இனி மேலும் நின்றால் பாகீரதி அம்மாளுக்கு அலுப்பு உண்டாகி விடுமோ என்று அவருக்கே தோன்றியது.

"நான் வருகிறேன்...உங்கள் குடும்பத்தையே நிர்மூலமாக்கியதற்கு மேல் லோகத்திலே மன்னிப்பு கிடைக்காது... உங்களுடைய கண்ணீர் என்னைச் சுட்டெரிக்கும்...அப்படி எரிக்காதபடி என்னை மன்னித்து விடுங்கள்..."



"விதி விளையாடிய விளையாட்டுக்கு நான் உங்களைக் குற்றம் சொல்லி என்ன பிரயோசனம்?" என்றாள் பாகீரதி. அவளுடைய நா தழுதழுத்தது.

அடுத்த விநாடி கோதண்டராமன் காரை நோக்கி நடக்கலானார்.

கோதண்டராமன் திரும்பிச் சென்றதும், கற்சிலை போல உட்கார்ந்து விட்ட பாகீரதி அம்மாள் மனம் குழம்பிப் போனாள். அன்றுதான் கணவர் இறந்து போனாரோ என்ற பிரமை அவளுள் தோன்றி வதைத்தது. பத்து ஆண்டுகளுக்கு முன்னால் நடந்ததெல்லாம் மனத்திரையில் ஓடின. சீதாவுக்கு நிச்சயதார்த்தம் நடத்தியது, கை நிறையப் பணத்தைக் கொடுத்து விட்டு அவர் ரயிலடிக்குச் செல்லக் கோதண்டராமனின் காரில் ஏறியது, அவர் தில்லியிலிருந்து எழுதிய கடிதம், கான்பூரிலிருந்து வந்த தந்தி, எல்லாம் இன்று நடந்தவை போலத் தோன்றின.



கோதண்டராமனுக்கு ஊரில் நல்ல பெயர் இல்லை என்று அவளுக்குத் தெரியும். அவரிடம் அந்தரங்கக் காரியதரிசியாக இருந்த சாம்பமூர்த்தி கோதண்டராமனின் வியாபாரத்தைப் பற்றிப் பேசியதே இல்லை என்றாலும், பிறர் மூலமாக அவள் நிறையக் கேள்விப்பட்டிருந்தாள். ஆனால் எத்தனையோ கறுப்பு மார்க்கெட்காரர்களைப் போல் அவரும் ஒருவர் என்ற எண்ணம்தான் மேலோங்கி இருந்தது.



பி.வி.ஆர்

இப்போதுதான் உண்மையான கோதண்டராமனை அறிந்து கொண்டாள். ஒரு கொலைக்கும் அஞ்சாதவர் அல்லவா அவர்? என்னதான் அவர், அவளுடைய கணவருடைய கொலையுடன் நேரடியாகச் சம்பந்தப்படாமல் இருந்தாலும், கொலை நடந்தபின் அதைப் பற்றிய தகவலே வெளிவராமல் அடித்து விட்டாரே ? இதற்குக் காரணம் அவருக்குத் தம்முடைய இரண்டு லட்ச ரூபாயின் மேல் இருந்த பேராசை தானே ?

நினைக்க நினைக்கக் கோதண்டராமன் மீது கோபம் அதிகரித்துக் கொண்டே போனாலும், இவ்வளவு தூரம் அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்க வந்ததற்குக் காரணம் அவர் எதிர்பார்த்திருக்கிற மரணம்தான்! சாகப்போகிறவர்மீது அவள் கோபித்து, உணர்ச்சிகளைக் கொட்டி, தன்னைத் தானே கடைசியில் நொந்து கொள்ளுவானேன்?

"ஏனம்மா, அவர் யார்?'' திடீரென்று கேட்டாள் கமலா.

''யாரானால் உனக்கு என்ன?''

''எதுக்கு வந்தார் ?''

''எதுக்காயிருந்தால் என்ன!''

''பெரிய கார் அம்மா, லேட்டஸ்டு 'டாட்ஜ்'!

''இருந்துட்டுப் போறது.....''

''நீ ஏன் ஒரு மாதிரியா இருக்கே?''

''நீ பேசாமல் போனால் சரியாகிவிடும்........''

''அப்பா ! இந்த வீட்டிலே ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு சமயத்திலே ஒவ்வொரு குணம்!'' என்று பொருமிக் கொண்டே கமலா படுக்கை அறைக்குள் நுழைந்தாள்.

சுமார் எட்டரை மணிக்குச் சீதா திரும்பி வந்தபோது கற்பகம் அவளை அழைத்தாள்.

''என்ன வேணும் கற்பகம்...?''

''நீ அந்தப் பக்கம் போனாய்... இந்தப் பக்கம் உங்க வீட்டுக்கு ஒரு கார் வந்தது'' என்றாள்.

''காரா... எங்க வீட்டுக்கா? இருக்காதே...''

''நான் பார்த்தேன். பெரிய டாட்ஜ் கார்...''

திடீரென்று ரவியின் நினைவு வந்தது சீதாவுக்கு. அன்று அவன் வந்தது கற்பகம் சொல்வது போன்ற ஒரு காரில்தானே?



''யாரோ... அம்மா கிட்டே கேட்டால் தெரியும்...?''

சொல்லிவிட்டு அவள் வீட்டினுள் நுழைந்தாள். முற்றத்தினருகே உட்கார்ந்திருந்த அம்மாவைப் பார்த்ததும், ''ஏன் அம்மா, யார் வந்திருந்தார்கள், காரிலே?'' என்று கேட்டாள்.

''உனக்கு யார் சொன்னார்கள்?''

''கற்பகம்..''

''நம்ம வீட்டுக்கு யார் வருகிறு போகிறான்னு பார்க்கிறதுதான் அவ வேலை போலிருக்கு!'' பாகீரதி கடிந்து கொண்டாளே தவிர, சீதாவுக்குப் பதில் சொல்லவில்லை.

''என்னம்மா சொல்லக்கூடாதா?''

''உனக்கும் வந்தவருக்கும் சம்பந்தம் இல்லை...''

''சரி, சொல்லாவிட்டால் வேண்டாம்...'' என்ற சீதா, ''கமலா, ஜானு வந்தாச்சா?'' என்று கேட்டாள்.

படுக்கை அறையில் இருந்தவாறே, கமலா, ''இல்லை!'' என்று இரைந்தாள்.

சீதா மௌனமாய்க் குளியலறைக்குச் சென்று கைகால்களைக் கழுவிக் கொண்டு திரும்பினாள். இன்னும் அதே இடத்தில் உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருக்கிறவளைப்போல உட்கார்ந்திருந்த தாயாரைப் பார்த்தாள். அவள் இது வரை கண்டிராத வேதனை அவள் முகத்தில் பிரதிபலிப்பதைக் கண்டாள்.

''ஏன் அம்மா, வந்தவர் நம்மைத் தேடிக் கொண்டு வந்திருந்தாரா — இல்லை, சந்தானத்தைப் பார்க்க வந்தாரா...''

''சீதா, இப்போ ஏன் தொந்தரவு செய்யறே?''

''அம்மாவைத்தான் பார்க்க வந்திருந்தார்...அவர்''

அவர் வந்த கார் ரொம்பப் பெரிசு என்றானே, கற்பகம். அப்படியானால் ரவிதான் வந்திருக்க வேண்டும்.

''வந்திருந்தவர் பெயர் என்ன, ரவியா அம்மா?''

''இல்லேடீ...'' பாகீரதி மெதுவாக எழுந்தாள். பிறகு மெல்லிய குரலில், ''சீதா, சமயம் வர்றபோது நானே உன்கிட்ட எல்லாத்தையும்சொல்கிறேன் இப்போ என்னை ஏதும் கேட்டுத் துளைக்






வெள்ளை டெட்

சலவையின் மேன்மை, வெண்மையுடன் தூய்மை

வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

shilpi-som-29/6/1am

காதே... என் மனசு இடிஞ்சு போய்க் கிடக்கிறது!'' என்றான்.

சீதா அப்புறம் வாய் திறக்கவில்லை. அம்மாவின் போக்கிலே திடீர் மாற்றம் உண்டாகி யிருப்பதைக் கண்டு அவளுக்குப் பயம் பிறந்தது. ஆனால் அது தெளிய அம்மா ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாளே?

ஒன்பது மணிக்கு ஜானு கைப்பையை வீசிக்கொண்டு, தனக்கே உரித்தான விரைவோடு வந்தாள். வந்தவள், கூடத்தில் இருந்த கமலாவைப் பார்த்து,

''கமலா, ஜெர்ரி லூயி பிக்சர் பார்த்தேன். அப்பா! சிரிச்சுச் சிரிச்சு வயிறே குலுங்கிப் போயிடுத்து... இரட்டை—வேஷத்திலே வர்றான் .... ரொம்ப கிராண்ட்....'' என்றாள்.

''ஏண்டி என் வயித்தெரிச்சலைக் கிளப்பறே...?''

''நீயும் போய்ப் பாரேன்!'' என்றாள் ஜானு. அம்மாவின் முகத்தில் அவளுடைய கண்களுக்கு, அவள் இருந்த மனநிலையில் எந்த விதமான மாற்றமும் தெரியவில்லை. சீதாவும் அவளுக்குச் சுட்டிக்காட்டவில்லை.

# இரண்டாம் பாகம்

## அத்தியாயம் 1

ஆழ்வார்ப்பேட்டையில் கோதண்டராமனின் பங்களாவைத் தெரியாதவர் கிடையாது. ஆனால் அதனுள் சென்று பார்த்தவர்கள் வெகு சிலரே. இது வரையில் ஒரு பிச்சைக்காரன் காம்பவுண்டுக் கேட்டைத் தாண்டி உள்ளே சென்றிருக்கிறான் என்று 'பாக்கிய நிலைய'த்தில் சரித்திரம் ஏற்படவில்லை. பார்க்க வருகிறவர்கள் அவர்கள் மோட்டார் கார்களில் வருகிறவர்களாக இருந்தாலொழியத் தங்கள் பெயரையும் வந்த நோக்கத்தையும் கூர்க்காவிடம் சொல்லியாக வேண்டும். அவன் அதன்பின், காம்பவுண்டு கேட்டுக்கருகே இருக்கும் ஃபோன் மூலம் பங்களாவுக்குச் செய்தியை அனுப்புவான். கிடைக்கும் பதிலைப் பொறுத்திருக்கிறது, வருகிறவர்கள் மேலே நடக்க வேண்டுமா, அல்லது திரும்பிப் போக வேண்டுமா என்பது.

ஒரு ஏகரா நிலத்தில் நட்டநடுவே கட்டப்பட்டிருந்த 'பாக்கிய நிலையம்' பழைய காலப் பாணியில் இருந்தாலும் நவீன வசதிகளுடன் திகழ்ந்தது. பங்களாவுக்கு இருமருங்கிலும் கணக்கற்ற பூச்செடிகளும் கொடிகளும் அழகாக வளர்ந்திருந்தன. போர்ட்டிகோவைத் தாண்டினால் பச்சைப் பசேல் என்ற புல்வெளி, இரு காம்பவுண்டு கேட்டுகளுக்குச் செல்லும் சிமெண்டுப் பாதைகளுக்கு நடுவே அமைந்திருந்தது. விசாலமான புல்வெளியில் இரண்டு கமுகு மரங்கள் உருண்டு திரண்டு வளர்ந்திருந்தன. அவற்றுக்கிடையே இரண்டு சிமெண்டுப் பெஞ்சிகள் போடப்பட்டிருந்தன.

பங்களாவுக்குப் பின்னால் இரு சிறு வீடுகளும், இரண்டு ஷெட்டுகளும் இருந்தன. ஒரு பக்கத்தில் சற்றுத் தொலைவில் மாட்டுக் கொட்டில். ஒரு சீமைப் பசுவும் ஒரு நாட்டுப் பசுவும் உறவாடிக் கொண்டிருந்தன. பசுக்களையும் நந்தவனத்தையும் பார்த்துக் கொள்ள ஆறுமுகம் வீடு கட்டிய நாளிலிருந்து இருந்து வருகிறான். ஆளை உள்ளே அனுப்புவதா, வேண்டாமா என்று கேட்டறியவும், காவல் வேலை பார்க்கவும் இரண்டு கூர்க்கா காவல்காரர்கள். தூசியைத் துடைப்பதிலிருந்து எடுபிடி காரியங்களையெல்லாம் செய்ய சிமாச்சு என்ற சீனிவாசன். சமையல் வேலையில் கெட்டிக்காரி என்று கோதண்டராமனிடமே சர்ட்டிபிகேட் வாங்கிவிட்ட பாலம்மாள்.

பங்களா கோதண்டராமனின் சிறிய குடும்பத்துக்குச் சம்பந்தமில்லாத அளவுக்குப் பெரியது. போர்ட்டிகோவைத் தாண்டினால் நான்கைந்து வருடங்களுக்கு முன்னே 'மொஸாய்க்' பாஷனுக்கு மாறியிருந்த திண்ணை. அதில் நான்கு பிரம்பு நாற்காலிகள். அதன் பிறகு பிரும்மாண்டமான ஒரு ஹால். ஹாலின் நடுவே ஒரு சிறு டீப்பாய். அதைச் சுற்றி இரண்டு ஒற்றைச் சோபாக்களும், ஓர் இரட்டையும் இருந்தன. கோதண்டராமனைப் பார்க்க வருகிறவர்கள் நாற்காலியில் உட்கார வேண்டுமா அல்லது சோபாவில் உட்கார வேண்டுமா என்பதை அவரே தீர்மானித்து விடுவார்.

ஹாலுக்கு இருபுறங்களிலும் அறைகள் இருந்தன. வலதுபுறத்தில்

## காந்திஜி வகுத்த பாதை



ஒரு முறை காந்தி ஆசிரமத்திற்கு கப்பி ரோடு போட வேண்டியிருந்தது. ஆனால் ரோடு போடப் பணம் கொடுத்துக் கற்கள் வாங்க விருப்பமில்லை காந்திஜிக்கு. ''வயற் புறங்களில் ஏதேஷ்டமாகக் கற்கள் கிடக்க, வண்டிக்கு இரண்டு மூன்று ரூபாய்கள் கொடுத்துக் கற்கள் வாங்குவதா?'' என்று எண்ணினார். ஆகவே எல்லோரும் உலாவச் செல்லும் போது கற்கள் பொறுக்கி எடுத்து வர வேண்டும் என்று கூறினார். காந்தியுடன் உலாவிக் கொண்டே ''நான், நீ'' என்று போட்டி போட்டுக் கொண்டு கற்கள் பொறுக்கினர். இப்படியே சில நாட்களில் ரோடு போடக் கல் சேர்ந்து பணமும் மிச்சமாகியது. தொண்டர்கள் சரீரத்துக்கும் அப்பியாசம் கிடைத்தது! காந்திஜியின் 'ஒரு கல்லில் இரு மாங்காய்த்' திட்டம் எப்படி!

ஆதாரம்: ''காந்தி நினைவு மலர்''
தகவல்: ச. ஸ்ரீதரன்

---

இரண்டாவது அறையினின்றும் மாடிப் படி ஏறியது. கீழே ஹாலுக்குப் பின்னால் தாழ்வாரம், பூஜை அறை, சமையல் அறை என்று எவ்வளவோ! மாடியில் நான்கு அறைகளும், ஒரு ஹாலும் இருந்தன.

கடந்த இரண்டு மூன்று மாதங்களாகக் கோதண்டராமனுக்குத் தெய்வத்தின் ஞாபகம் உண்டாகியிருந்தது. 'ஹார்ட்டே' இல்லாதவருக்கு எப்படி 'ஹார்ட் அட்டாக்' வந்தது என்று ஊரிலே சிலர் ஏளனம் செய்தது அவருடைய காதுகளிலே எட்டினாலும், கோபம் வராத அளவுக்கு அவர் ஈசுவர பக்தியில் மூழ்க ஆரம்பித்திருந்தார். வருஷத்தில் இரண்டு திதிகளின்போதும், அமாவாசைகளன்றுமே பங்களாவைப் பார்த்திருந்த வைதீகர்கள் கடந்த நாற்பது நாட்களாக தினம் தினம் வந்து, கோதண்டராமன்செல்லுவதற்கு மோட்சப் பாதையை வகுக்கிறார்கள்.

அன்று ருத்ரஹோமம். இது மாதிரி எத்தனையோ ஹோமங்களையும் நவக்கிரகசாந்திகளையும் குறுகிய காலத்தில் செய்துவிட்ட கோதண்டராமன் காலை நாலரை மணிக்கே எழுந்து வெந்நீரில் ஸ்நானம் செய்து நெற்றி நிறையத் திருநீறு அணிந்து ஹாலுக்கு வந்தார்.

அவர் சோபாவில் உட்கார்ந்ததும், காப்பியும் கையுமாக, சீமாச்சு வந்து எதிரில் நின்றான். முதன் முதலாகக் கோதண்டராமனிடம் வேலைக்கோ அல்லது உதவி கோரியோ வருகிறவர்கள் கைகட்டி வாய் புதைத்து நிற்பார்கள். ஆனால் இந்த சீமாச்சுவுக்குக் கோதண்டராமன் இருபது வருஷப் பழக்கம். எஜமானனை 'மாமா' என்று அழைக்கும் அளவுக்கு ஓர் உரிமை அவனுக்கு உண்டு.

''ஏண்டா, இன்னிக்குக் காப்பி குடிக்கலாமாடா?'' உரக்கப் பேசியே பழக்கப்பட்ட கோதண்டராமன் தாழ்ந்த குரலில் பேசுவதற்குக் காரணம், தூங்குகிறவர்கள் சத்தத்தில் எழுந்து விடுவார்களோ என்ற கரிசனம் அல்ல. அவருடைய 'ஹார்ட்'டுக்குத் தொண்டையின் சத்தம் ஒத்துக் கொள்ளாது. அவ்வளவுதான்.

''நன்னாச் சாப்பிடலாம் மாமா! தெவசத்தன்னிக்கே காப்பி குடிப்பீர்களே!''

''மாமிகிட்டே போய்க்கேளுடா...!''

''மாமிக்கு என்ன மாமா, தெரியும்? நான் சொல்றேன். ஆறிப் போறதுக்கு முன்னாடி சாப்பிடுங்கள். வாத்தியார்தானே ஹோமம் பண்ணப் போறார்..... !''

''என்னமோ, நீ அடிச்சுச் சொல்லிட்டே!'' கோதண்டராமன் மெதுவாகக் காப்பியை அருந்திவிட்டு, ''ஏண்டா, இந்த ஹோமம் இன்னிக்கு நடக்கப் போறது ரவிக்குத் தெரியுமோ இல்லியோ..... பின் ஏன் அவன் பம்பாய்க்குப் போனான்.....?'' என்று கேட்டார்.

''மாமா....'' என்று இழுத்த சீமாச்சு ''ரவி எங்காவது போகலேன்னா அதுக்குக் காரணம் கேட்கலாம். அவன் தான் நெனைச்சண்டா பம்பாயும், கல்கத்தாவும், டில்லியுமா போறானே... நீங்க இடுப்பு ஒடியச் சம்பாதிச்சதை அவன் விதை தெளிக்கிற மாதிரி தெளிக்கிறான்.

''போகட்டும்டா! அவனுக்காகத் தானேடா சம்பாதிச்சேன்!'' என்றார் கோதண்டராமன்.

சுமார் ஐந்தரை மணிக்கு ஈரத் தலையைத் துண்டில் கட்டிக் கொண்டு, நெற்றியில் குங்குமம் துலங்க, பட்டுப் புடவை சரசரக்க, பாக்கியம் ஹாலுக்கு வந்தாள்.

மகத்தான

# விழாக்காலச்

சலுகை



வாங்குவீர்

ஒரு

**நேஷனல்**

**எக்கோ** ரேடியோ

Kleertone கிளியர்டோன்

சாதனங்களின் விலைகளிலே

**10% விசேஷத்**

**தள்ளுபடி** பெறுங்கள்!

உங்கள் நேஷனல்-எக்கோ வியாபாரியை இன்றே காண்க!

GRA

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிட்.,
பம்பாய் . கல்கத்தா . சென்னை . டெல்லி
பெங்களூர் . செகந்தராபாத் . பாட்னா.

NE 176 TM

''குளிச்சாச்சா....?'' 'ஹிந்து'வைப் படித்துக் கொண்டே கோதண்டராமன் கேட்டார்.

''உம்....'' என்ற பாக்கியம் அவருக்கு அருகே ஒற்றைச் சோபாவில் உட்கார்ந்து கொண்டாள்.

''வாத்தியார் ஏழு மணிக்குத் தானே வரப் போகிறார்? நீங்க எதுக்கு ஊருக்கு முன்னாடி எழுந்து, தூக்கத்தையும் கெடுத்துண்டு உடம்பையும் பார்த்துக்காம இருக்கிறீர்கள்?''

கோதண்டராமன் பேப்பரை மடித்து விட்டு மனைவியைப் பார்த்தார். அவளுடைய நெற்றிக் குங்குமத்தில் தனியாக ஓர் ஒளி பிரகாசிப்பது போல் அவர் கண்களுக்குத் தெரிந்தது.

''எல்லாம் உன் நெத்தியிலேஇருக்கே, அதுக்குத்தான் பாக்கியம்'' என்றார்.

அவருடைய மகிழ்ச்சியில் அவள் இன்னும் அதிகமாகக் கோபித்துக் கொண்டாள்.

''இந்த நெத்திக் குங்குமத்தோடே தான் நான் போவேன். நீங்கள் அநாவசியமா அலட்டிக் கொள்ளுகிறீர்கள். பூஜையும் புனஸ்காரமும் வேண்டியதுதான். ஆனா தேவதைகளையெல்லாம் ஒரே நாளிலே விலைக்கு வாங்கிடணும்னு நீங்க இப்படி தினம் தினம் அது இதுன்னு ஹோமப் புகையிலேயே உட்கார்ந்து, வேளா வேளைக்குச் சரியாச் சாப்பிடாம இருந்தா, என்ன பிரயோசனம்? டாக்டர் சொல்றதையும் கேட்க மாட்டேன் என்கிறீர்கள்......''

அவள் பேசி முடிக்கவும், சீமாச்சு, அவளுக்குக் காப்பி கொண்டு வரவும் சரியாக இருந்தது.

''நீங்கள் சாப்பிட்டாச்சு இல்லியா?''

''நான் கொடுத்தேன். நாலே முக்கால் மணி இருக்கும்.....'' என்றான் சீமாச்சு.

மனைவி செல்லமாகக் கடிந்து கொண்டதற்குப் பதில் சொல்லத் தேவையில்லை என்று கோதண்டராமன் படிப்பில் கவனத்தைத் திருப்பினார்.

இன்று ஐம்பத்தேழு வயதில் லட்சாதிபதியாகத் திகழும் கோதண்டராமன் தம் முப்பது அல்லது முப்பத்திரண்டு வயது வரையில் படாத கஷ்டமெல்லாம் பட்டவர். உலகத்திலேயே பொருளாதார நெருக்கடியும், வேலையில்லாக் கஷ்டமும் தலைவிரித்தாடிய நாட்களில் ஒரு மானமுள்ள பிழைப்புக்குத் தலைகீழாக அலைந்தார். அவருடைய தகப்பனார் அவருக்குச் சொத்துதான் வைக்கவில்லை என்றால், நல்ல படிப்பையாவது அளித்திருக்கக் கூடாதா? ஏதோ பெயர் அளவில் இருந்த சொத்தையும் தம் நாளிலேயே விற்றுவிட்டு அவர் போய்ச் சேர்ந்தார்.

வறுமையில் கஷ்டப்படுபவர்களுக்கு இயற்கையாகவே பிறக்கும் தைரியமும் நெஞ்சுரமும் கோதண்டராமனுக்கும் இருந்தன. அவருடைய அரைகுறைப் படிப்புக்கு யாரும் நல்ல வேலை ஒன்றைத் தரமாட்டார்கள் என்று அவர் அறிந்து, சிறிய வியாபாரமாக ஆரம்பிக்க வேண்டும் என்ற கனவில் மூழ்கிக் கிடந்தார். ஆனால் முதலுக்கு எங்கே செல்லுவது? உறவினர்கள் கோதண்டராமன் மீது கருணையோ, பரிவோ காட்டவில்லை. என்ன வியாபாரமாக இருந்தாலும் அதற்கு முதல் வேண்டும், முதலில் அதைச் சம்பாதிக்க வேண்டும் என்ற நிலை ஏற்படவே அவர் ஊர் ஊராக அலைந்து திரியும் வியாபாரப் பிரதிநிதியாக ஒருவரிடம் வேலைக்கமர்ந்தார். பற்பொடி,சோப்பு என்று ஆரம்பித்த அவர் கடைசியில் மருந்து வகையறுக்கள் வரை எட்டி விட்டார். அதற்குள் அவருடைய வயது ஏழு ஏறிவிட்டது.

அந்த ஏழு வருஷத்தில்தான், பணத்தை எப்படி மிச்சப்படுத்துவது என்ற கலையையே அவர் கற்றுக் கொண்டார். இரண்டு வேளைச் சாப்பாட்டில ஒன்றைக் குறைத்துக் கொண்டால், ஓட்டல் செலவில் ஆறு அணா குறையும் என்று அவர் மனம் கணக்குப் போட்டது. ஓட்டல் ரூமுக்கு இரண்டு ரூபாய் கொடுப்பதை விட, நாலணாவுக்கு ஓட்டல் வராந்தாவோ அல்லது சத்திரமோ லாபம் அளிக்கும் என்பதைக் கண்டு கொண்டார். வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டிப் பணம் சேர்ப்பது என்பார்களே அதைத்தான் அவர் ஏழு வருஷங்கள் செய்தார். முடிவு ? சேமிப்பு ஆயிரம் ரூபாயை எட்டியது.

அந்த ஆயிரம் ரூபாயுடன் அவர் சென்னைக்கு வரவும், ஹெர் ஹிட்லர் உலகத்தையே தன் காலடியில் கொண்டு வர வேண்டும் என்று எண்ணிச் செயலில் இறங்கவும் சரியாக இருந்தது.

கோதண்டராமன் இரும்பில் தம் பணத்தை முடக்கினார். இரும்பு தங்கமாகியது. தங்கத்தின் விலை உயர்ந்தது. நாள் செல்லச் செல்ல, ஹிட்லரை மனமார வாழ்த்திக் கொண்டே, கோதண்டராமன் மனித ரத்தத்தின் ருசியைக் கண்ட புலிபோல வெறி பிடித்துப் பணத்தைத் தேடலானார். நாளடைவில் அவர் பணத்தைத் தேடிக் கொண்டு போவது நின்றது. பணம் அவரைத் தேடி வந்தது. **(தொடரும்)**



ராஜவைத்தியம்

☐ அம்மைக்குத் தடுப்பு ஊசி கண்டுபிடித்தகாலம் அது. இதைக் கேள்வியுற்ற ருஷிய சக்கரவர்த்தினி காதரைன், இங்கிலாந்திலுள்ள டாக்டர் டிம்ஸ்டேனுக்குக் கப்பல் அனுப்பி அவரை வரவழைத்தாள். ராஜோபசாரத்துடன் வரவேற்கப்பட்டார் டாக்டர். ராணிக்கும், ராஜகுமாரனுக்கும் ஊசி போட்டார். இதற்காக அவருக்கு ராணி இரண்டரை லட்சம் ரூபாய் சம்மானம் அளித்ததோடு, அவர் வாழ்நாள் முழுதும் ஆண்டொன்றுக்குப் பதினாயிரம் ரூபாய் பென்ஷனும் தந்தாள்.

☐ பிரான்ஸ் ஜோஸப் மன்னரின் உண்மையான உடல் நிலையைத் தெரிவிக்க அவரது வைத்தியர்கள் தயங்கினர். அவர் இங்கிலாந்திலிருந்து டாக்டர் குவாரினைத் தருவித்து ''நீங்களாவது உண்மையைச் சொல்லுங்கள். நான் எவ்வளவு காலம் இருப்பேன்?'' என்று கேட்டார். குவாரின் பரிசோதனை செய்தார். ''மன்னரே, இருபத்துநாலு மணிக்கு மேல் இருக்க மாட்டீர்கள்'' என்றார். அவரது நேர்மையில் மகிழ்ந்த மன்னர் அவருக்கு ஒரு குறுநிலப் பிரபுத்துவத்தை வழங்கியதோடு, ஆண்டு ஒன்றுக்கு ரூ. 25,000 பென்ஷனுக்கும் உத்தரவிட்டார்.



☐ எண்பதாண்டுகளுக்கு முன் ஆப்கானிய அமீர் ஒருவர் தம் பல்லைப் பிடுங்குவதற்காக இந்தியாவிலிருந்து ஒரு வைத்தியரை வரவழைத்தார். வலியில்லாமல் பல்லைப் பிடுங்க முடியும் என்பதை அமீர் நம்பவில்லை. எனவே, ஒரு சிப்பாய்க்கும், ஒரு விவசாயிக்கும், ஒரு நடன மாதுக்கும் மற்றும் பல பிரஜைகளுக்கும் அவர் கண் முன்னரே பற்கள் பிடுங்கப் பட்டன. பிறகு அவரும் வலியின்றிப் பல் பிடுங்கப்பட்டுப் பேரானந்தம் அடைந்தார். டாக்டருக்குக் கூடை நிறைய நகைகளைப் பரிசளித்தார். 'ஆப்கானியத் தாரகை' என்ற விருதும் வழங்கினர். இவை யாவற்றுக்கும் மேலாக, தமது நாட்டிய மங்கைகளை டாக்டர் முன் நிறுத்தி, ''உங்களுக்கு வேண்டியவளை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார்! இது உலகிலேயே வேறெந்த வைத்தியருக்கும் கிடைத்திராத பரிசுதான்!

☐ அந்தக் காலத்தில் ராமபுரி நவாப் தமது முடக்குவாதத்தைக் குணப்படுத்திய பிரிட்டிஷ் ராணுவ டாக்டருக்கு இரண்டு லட்சம் ரூபாய் சம்மானமளித்தார்.

ஆதாரம்: ''ஹிந்து'' ஞாயிறு சஞ்சிகையில் ஸ்ரீ ஹரார்வி டே எழுதிய கட்டுரை



## அழுதக்கை!

1879-ம் ஆண்டு ஜான் ஹாப்கின்ஸ் பல்கலைக் கழகத்தில் ஒரு விஞ்ஞானி ரசாயன சோதனைகளைச் செய்துகொண்டிருந்தார். வேலை முடிந்து வீட்டுக்குச் சென்று சாப்பிட உட்கார்ந்தால், எதை எடுத்து வாயில் வைத்தாலும் தித்தித்தது. முதலில் அவருக்கு ஒன்றும் புரியவில்லை. பின்னால் விளங்கியது, தித்திப்

## ஒரு பானைச் சோற்றுக்கு....!

ஜனாதிபதி கென்னடிக்கு நாள்தோறும் பொது மக்களிடமிருந்து பல்லாயிரக் கணக்கான கடிதங்கள் வரும். அவற்றுக்குப் பொருத்தமான பதில்களை அவருடைய காரியதரிசிகளே எழுதி அனுப்பி விடுவார்கள். ஆனால் கென்னடி முதலில் எல்லாக் கடிதங்களையும் அடுக்கிப் பார்க்கச் சொல்வாராம். பிறகு அவற்றிலிருந்து ஐம்பதுக்கு ஒன்று விதம் பார்த்துத் தாமே பதில் எழுதுவாராம்!

ஆதாரம் "டிங்க்" - 'அனில்'



# பல்சுவைப் பக்கம் ②

புக்குக் காரணம் தம் கைகளே என்பது. அவர் அன்று செய்த ஆராய்ச்சியில் விளைந்த பொருள் கையில் ஒட்டிக்கொண்டிருந்ததே இத்திப்புக்குக் காரணம். அப்பொருள்தான் 'சாகரின்'. சர்க்கரையைவிட 550 மடங்கு இத்திப்புள்ளது!

ஆதாரம்: "வளரும் விஞ்ஞான விந்தைகள்"
தகவல்: காழி ஜெயா



## சென்னையில் எண்ணெய்

இந்தியாவின் ஒன்பதாவது எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையை சென்னையை அடுத்த மணலியில் பிரம்மாண்டமான முறையில் நிறுவி வருகிறார்கள். வருஷத்துக்கு இரண்டரை மில்லியன் மெட்ரிக் டன் எடையுள்ள பெட்ரோலிலிருந்து தயாராகும் பொருள்களை இந்தத் தொழிற்சாலையில் தயாரிக்க முடியுமாம். இது அரசாங்கத்தின் குறிக்கோள்.

பார்சிய வளைகுடாவிலிருந்து குருடாயில் சென்னைத் துறைமுகத்துக்குக் கொண்டுவரப்படும். அங்கிருந்து வரும் இந்தக் 'கச்சா' எண்ணெயைச் சேமித்துவைக்க விசேஷ வசதிகள் கொண்ட கொப்பறைகள் சென்னைத் துறைமுகத்தில் தயாராகின்றன. அங்கிருந்து மணலிக்கு (ஐந்தரைமைல் தூரத்துக்கு) குழாய்கள் மூலம் இந்தக் குருடாயில் கொண்டு வரப்பட்டு இங்கு சுத்திகரிக்கப்படும். சுத்திகரிக்கும் போது கிடைக்கும் உப-பொருள்கள் பலப்பல. மசல் எண்ணெய், பார்னல் எண்ணெய், சமையலறையில் பயன்படும் வாயுக்கள், லூப்ரி கேட்டிங் எண்ணெய்த் தனம், இத்தனைக்கும் மேலாக, முக்கியமாக, கந்தகம். இந்தியாவில் மட்டுமல்லாமல் உலகம் முழுவதிலுமே பற்றாக்குறையாக உள்ளதொரு மூலப் பொருள் இது.

இந்த ஆலையில் 13 யூனிட்டுகள் அமைக்கப்படுமாம். ஆரம்ப நிலையிலுள்ள இச்சுத்திகரிப்பு ஆலையில் நிறுவிவரும் சாதனங்களைப் பார்த்தாலே பிரமிப்பூட்டுவதாக உள்ளது. தொழிற்சாலை 1968-ம் ஆண்டு முடிவில் உற்பத்தியைத் தொடங்கிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இன்று பொட்டல் வெளியாகக் கிடக்குமிடம் அன்று கோடிக்கணக்கில் கொண்டு வந்து கொட்டும் குபேரபுரியா யிருக்கும்.

# பாபுஜி: புனித நினைவுகள்

மீ.லி. சபரிராஜன்

அண்ணல் காந்தியின் ஜயந்தியை யொட்டி அவரது திருஉருவைத் தாங்கி வரும் இவ்விதழில் அவரது எளிமையை நினைவு கூர்கிறது இக் கட்டுரை.

## ☐ தொண்டரின் தொண்டர்

**1917**ம் ஆண்டு. நவம்பர் மாதம் ஒரு நாள்.

ஓர் இளைஞர் காந்தியடிகளிடம் வந்தார். அவர் சட்டக் கல்வி பயின்றவர். பம்பாய் அரசாங்க சேவையில் சிறிது காலம் இருந்தவர். "நான் தங்கள் காரியதரிசியாக இருக்க விரும்புகிறேன்" என்றார். அவ்வேலைக்குத் தாம் தகுதியானவர் என்பதற்குச் சான்றாகத் தாம் எழுதிய சில கட்டுரைகளையும் காட்டினார். அவருடைய எழுத்து அழகாயிருந்தது. முகம் அகத்தின் அழகைக் காட்டிற்று. பத்துப் பதினைந்து நிமிட நேரம்தான் இருவரும் பேசினார்கள். காந்தியடிகள், "சரி, நீர் என்னுடன் இருக்கலாம்" என்றார்.

"எப்போது நான் வேலை தொடங்கலாம்?" என்றார் இளைஞர்.

"ஏற்கனவே நீர் வேலையைத் தொடங்கிவிட்டீர்" என்றார் காந்தியடிகள்.

இளைஞர் இதை எதிர்பார்க்கவில்லை. "ஊருக்குப் போய்விட்டுச் சில நாட்களில் வந்துவிடுகிறேன்" என்றார்.

"வேண்டாம்; தேவையில்லை. அதெல்லாம் பின்பு பார்த்துக் கொள்ளலாம்" என்றார் காந்தியடிகள்.

அந்த இளைஞர்தான் மகாதேவ தேசாய். அன்பும் பண்பும் நிறைந்த அறிஞர். கடைசி மூச்சு இருக்கும்வரை காந்தியடிகளுக்குத் தொண்டாற்றினார். நீங்காத நிழல் போல அவருடனேயே இருந்தார்.

ஒரு நாள் இருவரும் ரயிலில் போய்க் கொண்டிருந்தார்கள். ஓடும் இரயிலில் எழுதுவதில் வல்லவர் காந்தியடிகள். இந்தக் கலையை அவரிடம் கற்று அவரையே மிஞ்சினார் சீடர்.



அன்று வேலை மிகுதி. மாலையில் எழுதத் தொடங்கிய தேசாய், எழுதிக் கொண்டேயிருந்தார். நள்ளிரவும் கடந்தது. மணி ஒன்று. இரண்டு – மூன்றுக்கு மேலேயே ஆகிவிட்டது. ஒரு வழியாக வேலை முடிந்தது. சற்றுக் கண்ணை மூடினார். வழக்கமாக அவர் பொழுது புலர்ந்ததுமே எழுந்துவிடுவார். ஆனால் அன்று தூங்கிக் கொண்டேயிருந்தார். நல்ல தூக்கம். ஏழு, ஏழரை மணிக்கு விழித்தார். எழுந்து முன்னே பார்த்த போது, என்ன அதிசயம்! ரொட்டி, வெண்ணெய், பால், தேநீர் முதலியவை யெல்லாம் வைக்கப்பட்டிருந்தன! தேசாய்க்கு வியப்பும் திகைப்பும் உண்டாயின. அவை எப்படி அங்கு வந்தன?

காந்தியடிகள் தேநீர் சாப்பிடுவதை நிறுத்திப் பல ஆண்டுகள் ஆயின. ஆனால் தேசாய்க்குத் தேநீர் என்றால் விருப்பம் அதிகம். இது காந்தியடிகளுக்குத் தெரியும். ஆகவே, களைத்துப்போன தம் காரியதரிசி எழுந்தவுடன் அவருக்கு வேண்டியனவெல்லாம் தயாரா யிருக்க வேண்டுமென்று விரும்பினார் அவர். இதற்காக, தானே வண்டியை விட்டு இறங்கிச் சென்று, ஸ்டேஷனில் உள்ள சிற்றுண்டிச்சாலையினரிடம் சொல்லிவிட்டு வந்தார். அவர்களும் அப்படியே கொண்டு வந்தார்கள். காந்தியடிகள் அதை ஒழுங்காக வைத்துவிட்டு, தேசாய் எழுந்திருப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தார்.

என்ன அன்பு, என்ன பரிவு!

## ☐ உடல் கொலையும் சத்தியத்தின் கொலையும்

**கா**ந்தியடிகள் வழக்கறிஞராக இருந்த போது பொய் வழக்கே எடுத்துக் கொண்டதில்லை. தம்மிடம் வரும் வழக்குகளைப் பற்றிய உண்மை விவரங்களை மற்றவர்களிடம் கேட்டறிந்து கொள்வார். திருப்தி ஏற்பட்டால் மட்டும் அவற்றை ஏற்றுக்கொள்வார். இது மாஜிஸ்திரேட்டுகளுக்குத் தெரியும். விரைவில் அவருக்குப் பெரும் புகழும் உண்டாயின. "காந்தியா, அவர் நியாயமான வழக்குக்குத்தான் ஆஜராவார். அதில் வெற்றியும் அடைவார்" என்று எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள்.

அவருடைய நன்மதிப்பை ஒரு சீக்கியர் பயன்படுத்திக்கொள்ள விரும்பினார். அவர் பெயர் ஹரூரா சிங். ஜோகனிஸ்பர்க்குக்கு அருகேயுள்ள ஓர் ஊரைச் சேர்ந்தவர். அவ்



ஊரில் அவர் ஒருவரைக் கொன்றுவிட்டார். அவர்மீது வழக்குத் தொடங்கிற்று. கொலைத் தண்டனை நிச்சயம் என்றே எல்லோரும் நினைத்தார்கள். தண்டனையிலிருந்து அவரைத் தப்புவிக்க என்ன செய்வதென்று அவருடைய உற்றாரும் நண்பர்களும் யோசித்தார்கள். காந்தியடிகளை அவ்வழக்கில் ஆஜராகும்படி செய்தால் வெற்றி நிச்சயமென்று அவர்கள் கருதினார்கள். ஆகவே அவரிடம் சென்றார்கள். ஆனால் உண்மை என்னவென்பது தெரிந்ததும் அந்த வழக்கை எடுத்துக் கொள்ள மறுத்து விட்டார் காந்தியடிகள்.

பணம் உள்ள புள்ளிகள். ஆகவே அவர்கள் மனம் தளரவில்லை. ஆயிரம் பவுன் கொடுப்பதாய்ச் சொல்லி மூன்று ஐரோப்பிய வழக்கறிஞர்களை அமர்த்திக் கொண்டார்கள். அவர்கள் திறமை மிக்கவர்கள்தாம். எப்படியாவது வழக்கில் வெல்ல வேண்டும்; இதுதான் அவர்கள் குறிக்கோள். ஆகவே, இதற்காக என்னென்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் அவர்கள் செய்தார்கள். முடிவில் வெற்றி கிடைத்தது. ஹரூரா சிங் விடுதலையானார்.

விடுதலையான மறுநாள் அவர் காந்தியடிகளைச் சந்தித்தார். ''நீர் ஒருவர்தான் என்னைக் காப்பாற்ற முடியுமென்று நினைத்தீரோ?'' என்று குத்தலாகக் கேட்டார்.

காந்தியடிகளோ அமைதியாகப் பதில் சொன்னார்: ''ஹரூரா சிங், நீர் விடுதலையாகிவிட்டீர் என்பது உண்மைதான். ஆனால் அந்த விடுதலையைப் பெறுவதற்காக நீர் எவ்வளவு விலை கொடுத்திருக்கிறீர் தெரியுமா? சத்தியத்தையும் நேர்மையையும் கொன்று விட்டீர்!'' என்றார்.

ஹரூரா சிங் பதில் பேசவில்லை.

## ☐ சிறுமிக்கு வாக்கு

ஒரு நாள் மாலை காந்தியடிகள் உலாவுவதற்காகப் புறப்பட்டார். அவருடன் கூடச் சிறுவர் சிறுமியர் சிலர் சென்றனர். ஒரு சிறுமிக்கு வயது ஆறு இருக்கும். அவள் காந்தியடிகளைப் பார்த்து, ''பாபு, நான் தங்களுடன் கொஞ்சம் தனியாகப் பேச வேண்டும்'' என்றாள்.

அந்தச் சிறுமி ஆசிரமத்தில் காந்தியடிகளுடனேயே இருந்தவள். பெரிய பெரிய தலைவர்கள், அதிகாரிகள்; இராஜ தூதர்கள் முதலியோர் அவருடன் தனியாய்ப் பேசுவதைப் பார்த்தவள். ஆகையால், 'நாமும் என் காந்தித் தாத்தாவுடன் தனியாய்ப் பேசக் கூடாது?' என்று அவளுக்கு ஓர் ஆசை தோன்றியிருக்க வேண்டும். விருப்பத்தைத் தைரியமாய் வெளியிட்டாள்.

காந்தியடிகள் அதைக் கேட்டுக் கேலியாகச் சிரித்தாரா? இல்லை. ''அதற்கென்ன அம்மா, பேசலாம்'' என்றார் அவர்.

சிறுமி விடவில்லை. ''எப்போது பேசலாம் பாபு?'' என்றாள்!

''மாலை நான்கு மணிக்கு வா, பேசலாம்'' என்றார் காந்தியடிகள்.

மகிழ்வுடன் போய்விட்டாள் அவள். எப்போது மணி நான்கு ஆகும் என்று காத்துக் கொண்டே இருந்தாள். நான்கு மணி ஆயிற்று. காந்தியடிகளின் அறைக்குப் போனாள்.

அங்கு காந்தியடிகள் மட்டுமல்ல, இன்னும் பலர் கூடியிருந்தார்கள். எல்லோரும் பெரியவர்கள், தலைவர்கள். ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிக் காந்தியடிகளுடன் பேசிக்கொண்டிருந்தார்கள். காந்தியடிகள் சிறுமியைப் பார்த்தாரோ இல்லையோ அவளுக்குக் கொடுத்த வாக்கு அவருக்கு நினைவு வந்து விட்டது. அவ்வளவு முக்கியமான பேச்சுக்களையும் விட்டுவிட்டு எழுந்தார். தலைவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. காந்தியடிகள் அவர்களைப் பார்த்து, ''இந்தச் சிறுமி தனியாய் என்னுடன் ஏதோ பேசவேண்டுமென்று சொன்னாள். அதற்காக வரச் சொன்னேன். நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். இதோ வந்துவிடுகிறேன்'' என்று சொல்லி விட்டு அந்தச் சிறுமியை அப்பால் அழைத்துக் கொண்டு போனார்.

சிறுமி ஏதோ சொன்னாள். காந்தியடிகளும் ஏதோ பதில் சொன்னார். பேச்சு விரைவில் முடிந்தது. தனியாய் நெடு நேரம் பேச அவளுக்கு என்ன விஷயம் இருக்கும்?



# புதிய!

## டினோபால் 'எகானமி பேக்'




இப்பொழுது டினோபால் இந்தப் புதிய எகானமி பேக்கிலும் கிடைக்கிறது. துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்ய உங்களுக்காகும் செலவு முன்பைவிட மிகக் குறைவே. இன்றே வாங்கிப் பாருங்கள்! ஒரு பேக் பல நாட்களுக்கு வரும்; தவிர, செலவும் குறைவு! உங்கள் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்ய எப்பொழுதும், விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்படும் டினோபால் உபயோகியுங்கள். கால் டீஸ்பூன், ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்யப் போதுமானது.

**பளிச்சிடும் வெண்மைக்கு—டினோபால்**

---

**தேர்ந்தெடுக்க 3 விதமான பேக்குகள் உள்ளன:**






'ரெகுலர் பேக்'




'புதிய எகானமி பேக்'

---



டினோபால் என்பது ஜே. ஆர். கெய்கீ ஏ. ஜி., பாஸல், ஸ்விட்சர்லாந்து அவர்களின் ரெஜிஸ்டர்டு டிரேட் மார்க்காகும்

சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், த. பெ. 965, பம்பாய்-1 பி.ஆர்.

shilpi sgt 27a/67tm

இப்பொழுது நடைபெறுகிறது!

சென்னை :

**பிளாசா • ஸ்ரீ கிருஷ்ணா**

**மஹாலக்ஷ்மி • ராம்**

மற்றும் தென்னாடெங்கும்

கமால் பிரதர்ஸ்
(பிரைவேட்) லிமிடெட்

# கண் கண்ட தெய்வம்

இசை : K.V. மஹாதேவன்

ELEGANT

கதை, வசனம், டைரக்ஷன் :

இயக்குநர் திலகம் **K.S. கோபாலகிருஷ்ணன்**

சிறுமியை அனுப்பிவிட்டு காந்தியடிகள் கூட்டத்துக்குப் போனார். தலைவர்களுக்கு இது வியப்பாக இருந்தது. காந்தியடிகள் அவர்களைப் பார்த்துச் சொன்னார்: ''சில சமயம் நாம் குழந்தைகளிடம் அலட்சியமாக நடந்து கொள்ளுகிறோம். அவர்களுக்குக் கொடுத்த சொல்லையும் பெரிதாய் நினைப்ப தில்லை. இது சரியல்ல. நாம் வாக்குக் கொடுத்துவிட்டால் பெரியவர்களாயிருந்தாலும் சரி, சிறியவராயிருந்தாலும் சரி ஒரே மதிப்புக் கொடுக்க வேண்டும்.''



## ☐ அழுக்குக் கைக்குட்டை

**1943**-ம் ஆண்டு. காந்தியடிகளும் கஸ்தூரிபா அம்மையும் ஆகாகான் மாளிகையில் சிறை வைக்கப்பட்டிருந்தார்கள். அப்போது கஸ்தூரிபா அம்மை உடல் நலக் குறைவால் படுத்த படுக்கையாயிருந்தார். அவருக்குப் பேரன் பேத்திகள் பலர் இருந்தார்கள் – இப்போதும் இருக்கிறார்கள். அவர்களுள் சுமித்திராவும் ஒருத்தி. வயது எட்டு அல்லது ஒன்பது இருக்கும். அவள் தன் பாட்டியைப் பார்க்க விரும்பினாள். பாட்டியும் அந்தப் பேத்தியைப் பார்க்க ஆவலாயிருந்தாள். சுமித்திராவின் அப்பாவுக்கு இது தெரிந்தது. ஒரு நாள் அவர் தம் மகளை அழைத்துக் கொண்டு அங்கு புறப்பட்டார்.

''கைக்குட்டையை எடுத்துக் கொண்டாயா?'' என்று கேட்டாள் சுமித்திராவின் தாய்.

''ஆம். எடுத்துக் கொண்டேன்.'' என்றாள் சுமித்திரா.

மணி பத்து இருக்கும். அப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டே சுமித்திரா நடந்தாள். வழியில் உறவினர் வீடு இருந்தது. அங்கு சற்று நேரம் தங்கியிருந்தார்கள். பின்பு இரண்டு மணிக்குச் சிறைக்குப் போனார்கள். அன்று திங்கட்கிழமை. காந்தியடிகளுக்கு மௌன நாள். வாயே திறக்கமாட்டார். ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் எழுதிக் காட்டுவார்.

பேத்தியைப் பார்த்தார் அவர். மகிழ்ச்சியடைந்தார். ஆனால் அவள் கையில் வைத்திருந்த கைக்குட்டையைப் பார்த்ததும் அவருக்குஎன்னவோ போலாகி விட்டது. காரணம், அது அழுக்காயிருந்தது. வீட்டிலிருந்து புறப்படும்போது துப்புறவாகத்தான் இருந்தது. வழியில் கீழே விழுந்து அழுக்காகி விட்டது. ''அவசிப் பிழிந்தாவது சுத்தமாய் வைத்துக்கொள்'' என்று காந்தியடிகள் ஒரு காகிதத்தில் அவளுக்கு எழுதிக் காட்டினார்.

சுமித்திரா உதட்டைப் பிதுக்கினாள். ''மாட்டேன். அதை நனைத்துப் போட்டுவிட்டால் எனக்கு வேறு கைக்குட்டை இல்லையே! கையைத் துடைக்க நான் என்ன செய்வேன்?'' என்றாள்.

''நான் ஒரு கைக்குட்டை கொடுக்கிறேன்'' என்று எழுதினார் தாத்தா. அப்படியே ஒரு கைக்குட்டை கொடுத்தார்.

சுமித்திரா அழுக்குக் கைக்குட்டையை அங்கேயே போட்டுவிட்டாள். பின்பு பாட்டியைப் பார்க்கச் சென்றார்கள். அவளுடன் பேசி மகிழ்ந்தாள். அப்புறம் தன் தந்தையுடன் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

மறுநாள் யாரோ ஒருவர் ஒரு கைக்குட்டையைக் கொண்டு போய் அவளிடம் கொடுத்தார்கள். அவள் பார்த்தாள். அவளுடைய கைக்குட்டையேதான் அது. அதில் ஒரு துண்டுக் காகிதமும் இருந்தது. அதில் ஏதோ எழுதியிருந்தது. சுமித்திரா படித்துப் பார்த்தாள். ''இப்போது உன் கைக்குட்டை எவ்வளவு துப்புரவாயிருக்கிறது, பார்த்தாயா?'' என்று எழுதியிருந்தது. காந்தியடிகள் தம்கைப்படவெளுத்திருந்தார்.

சுமித்ராவின் முகம் மலர்ந்தது.

---

ஒருமுறை வங்க ஜமீன்தார் ஒருவர் வீட்டில் விருந்ினராகத் தங்கியிருந்தார் மகாத்மா காந்தி. ஜமீன்தார் வீட்டு மாடியில் அன்று மாலையில் பிரார்த்தனை நடக்க விருந்தது. பிரார்த்தனை தொடங்கும்பொழுது மின்சார விளக்குகளை அணைத்துவிடுவது காந்தியின் வழக்கம். பிரார்த்தனைக்கு தயாரானவுடன் விளக்கின் விசை ஜமீன்தாரின் தலைக்கு நேரே இருப்பதைக் கண்ட காந்தி ஜமீன்தாரிடம் ''விளக்கை அணைத்துவிடுங்கள்'' என்றார். ஆனால் ஜமீன்தாரோ ஏவலாட்களுக்கு உத்தரவிட்டார். இதைக் கண்டுகொண்ட காந்தி பிரார்த்தனை முடிந்து பேசும் பொழுது ''தன் உழைப்பால் கிடைக்காததை உண்பவன் திருடன் என்று கீதை கூறுகிறது'' என்று குறிப்பிட்டார். பிரார்த்தனை முடிந்து கூட்டம் கலையும்போது ஒருவர் அங்கிருந்த மேஜை மீதிருந்த கண்ணாடி ஜாடி ஒன்றைக் கீழே தள்ளி உடைத்துவிட்டார். அப்பொழுது அதிசயம் ஒன்று நடந்தது. ஜமீன்தார் தானே விரைவாகச் சென்று கண்ணாடித் துண்டுகளைப் பொறுக்கி வெளியே போட்டார்! காந்தி சிரித்துக் கொண்டே சென்றுவிட்டார்.

ஆதாரம்: ''மகாத்மா காந்தியின் வாழ்க்கையில் சில ரசமான சம்பவங்கள்''
தகவல்: ச. ஸ்ரீதரன்



# எங்கிருந்தோ வந்தவள்!

**"ராமப்ரியா"**

டாக்டர் மூர்த்தியின் பங்களா அன்று விழாக் கோலம் கொண்டு கல்யாணம் பட்டபாடாக இருந்தது. அவருடைய சக டாக்டர்களும் அவர்களது மனைவிமார்களுடன் வந்த வண்ணமாக இருந்தார்கள்.

டாக்டர் மூர்த்தியின் மனைவி தேவகிக்குக் குழந்தை பிறந்த நாற்பதாவது தினம். தொட்டில் போடுவதாக இருந்தது. தேவகி இந்த முறை பெற்றுப் பிழைத்தது புனர் ஜன்மம் எடுத்தமாதிரி என்று எல்லாரும் பேசிக் கொண்டார்கள். அதனால்தான் தொட்டில் போடும் வைபவத்தையும் நாமகரண விழாவையும் ஒன்றாக நாற்பதாம் நாளன்று வைத்துக் கொண்டார்கள்.

அநேகமாக வந்தவர்கள் அனைவரும் போய் விட்டார்கள். இரவு மணி எட்டடிக்கும் சமயம். தேவகி அலுப்புத் தீரக் கைகளைச் சொடுக்கி விட்டுக் கொண்டு குழந்தையிடம் வந்தாள். சின்னஞ்சிறு பச்சை மண், நாற்பது நாள் குழந்தை தொட்டிலில் பட்டு மெத்தையில் நெளிந்து கொண்டிருந்தது. பிறகு அழ ஆரம்பித்தது.

"என்ன தேவகி ? குழந்தையை ஏன் அழ விடுகிறாய்?" என்று கேட்டுக் கொண்டே டாக்டர் மூர்த்தி மாடியிலிருந்து இறங்கி வந்தார்.

தேவகி தன் யோசனைகளிலிருந்து கலைந்து ஒன்றுமே பேசாமல் குழந்தையை எடுத்து, மார்போடு அணைத்துக் கொண்டாள்.

திடீரென்று இரு பிஞ்சுக் கரங்கள் தன் கழுத்தைக் கட்டிக் கொண்டு முதுகில் சாய்வதை உணர்ந்து திடுக்கிட்டுத் திரும்பினாள் தேவகி. கையிலிருக்கும் குழந்தையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். ஆனந்தம் தான் முதுகை அப்படி முரட்டுத்தனமாகக் கட்டிக் கொண்டவள். ஆனந்தத்துடன் வந்த ஐந்து வயது பிரகாஷ் விரலை சூப்பிக் கொண்டு தந்தையின் அருகே நின்றான்.

தேவகி பத்ரகாளி ஆனாள்.

"ஏ! இடியட்! ஆனந்தம். ஏன் இப்படி எருமை மாடு மாதிரி வந்து விழுகிறாய் ? மூளை இருக்கிறதா உனக்கு? கையில் குழந்தை இருப்பது கண் தெரியவில்லை !"

தேவகிக்கு இப்படிக்கூடப் பேசத் தெரியுமா? டாக்டர் மூர்த்தி அசந்து போய் மனைவியைப் பார்த்துக் கொண்டே இருந்தார். பத்து வயதுச் சிறுமி ஆனந்தம் மூச்சுக் கூட விடத் தெரியாமல் பதறிப் போனாள்.

"ஸாரி, மம்மி! இத்தனை நாளா உங்க கிட்டே வரவேயில்லையே! உங்களைக் கட்டிக்கணும் போல இருந்தது. உங்ககிட்டே கேட்டு அப்படியே பேபியையும் மடியிலே வைச்சுக்கணும் போல ஆசையாயிருந்தது மம்மி! – இனிமே அப்படிச் செய்ய மாட்டேன் !" துக்கம் தொண்டையை அடைத்துக் கொள்ள, விசும்பிக் கொண்டே போய்விட்டாள். பிரகாஷ் ஒன்றும் புரியாமல் ஆனந்தத்தையும் பெற்றோரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு சகோதரி இருக்குமிடமே தொடர்ந்தான்.

"இந்த ஆனந்தம் வரவர ரொம்ப முரட்டுத் தனமாக ஆகிக்கொண்டு வருகிறது. சொன்ன பேச்சைக் கேட்பதில்லை!" என்று முணு முணுத்தவாறு தன் அபிப்பிராயத்தைச் சொன்னாள் தேவகி.

டாக்டர் மூர்த்தி கேலியாக நகைத்தார்.

"ஆனந்தம் ஒன்றும் மாறவில்லை. நீதான் ரொம்ப மாறிவருகிறாய், தேவகி! ஒன்று மட்டும் சொல்கிறேன். இந்த மாதிரி நீ மாறி வந்தால் நம் குடும்ப சந்தோஷமும் அமைதியும்கூட மாறித்தான் விடும்!" என்று சொல்லிவிட்டு எங்கோ பார்த்தபடி தன் உணர்ச்சியை மறைக்க முயன்றார்.

தேவகி, "நிஜமாக நான் மாறித்தான் போய் விட்டேன். இனி என்னைத் திருத்திக் கொள்ள முயல்கிறேன். இந்தக் குழந்தை என்னைக் கெட்டவளாக்கி விடும் என்று பயப்படுகிறேன்!" என்றாள். கண்களில் நீர் வழியத் தலையைக் குனிந்து கொண்டாள்.

அதற்கு மேல் டாக்டர் அங்கு நிற்கவில்லை. டக்டக் என்ற பூட்ஸ் ஒலிகள் அவர் மாடி ஏறுகிறார் என்பதைக் காட்டியது.

முதல் நாள் குழந்தைக்கு வந்த பரிசுகளைத் தேவகி, ஆனந்தத்தின் உதவியுடன் அடுக்கிக் கொண்டிருந்தாள். டாக்டர் மூர்த்தி மெதுவாகக் கீழே இறங்கி வந்தவர் தாயும் குழந்தைகளும் குதூகலமாக இருப்பதைப் பார்த்துத் தமக்குள் மகிழ்ந்தவாறு தாமும் அவர்களோடு மகிழ்ச்சியில் கலந்து கொள்ள உட்கார்ந்தார். முதலில் தொட்டிலின் அருகே போய்க் குழந்தையைப் பார்த்து விட்டு, தேவகியின் அருகே அமர்ந்தார்.

"இத்தனூண்டு சின்னப் பாப்பாவுக்கா இத்தனை பரிசுகள்?" என்று கேட்டார் பெருமையுடன்.

"பிரபல டாக்டரின் பெண்ணுக்குப் பரிசுகள் குவிந்து வருவதில் ஆச்சரியம் என்ன ? பிரகாஷுக்கு வந்த பரிசுகளைக் காட்டிலும் இவளுக்குப் பன்மடங்கு அதிகமாக வந்திருக்கிறது. அதனால் நீங்கள் நாளுக்கு நாள் பிரபலமாகிக் கொண்டு வருகிறீர்கள் என்று தெரிகிறது! பூரணியின் பரிசுப் பொருள்களையும் பிரகாஷுக்கு வந்த பரிசுகளுட்னேயே வைத்து விடலாம் என்றிருக்கிறேன்!" என்றாள் சந்தோஷத்துடன் தேவகி.

"அப்போது இவளைப் பூரணி என்று கூப்பிடத் தீர்மானித்து விட்டாயாக்கும்!" என்றார் டாக்டர் புன்னகையுடன்.

"சம்பூர்ணம் என்று பெரிய டாக்டர் வைத்த பெயரால்தானே இவளைக் கூப்பிட வேண்டும்? அதுதான் பூரணி என்று சுருக்கமாகக் கூப்பிடலாம் என்று நினைக்கிறேன்" என்றாள் தேவகி.

"என் குரு பெரிய டாக்டரை நினைத்தாலே எனக்கு உடல் பூரிக்கிறது தேவகி. அவர் எனக்குக் குரு மட்டுமல்ல. குலதெய்வமே அவர்தான். ஆனந்தத்துக்கு அவர் பெயர் சூட்டும் பொழுது நம் இருவருக்கும் அவள் ஆனந்தத்தைக் கொடுத்தாள் என்பதற்காக அந்தப் பெயரைச் சூட்டினார். பிரகாஷ் பிறந்தவுடன் இவன் நமக்கு மேலும் பிரகாசத்தை அளிக்க வேண்டும் என்று அந்தப் பெயரை வைத்தார். இக்குழந்தையுடன் நம் வாழ்க்கை பூரணத்துவம் அடைய வேண்டும் என்று சம்பூர்ணம் என்று அவர் வாயால் கூப்பிட்டார். உண்மையில் அவருக்கு நிகர் அவர்தான்!" என்று மனம் நெகிழச் சொன்னார் மூர்த்தி.

மனைவியின் முகத்தைப் பார்த்த டாக்டர் திடுக்கிட்டார். தேவகியின் முகம் வாடிக் கறுத்துப் போயிருந்தது.

"உம்! மளமளவென்று சாமான்களை அடுக்கிவிட்டுப் போங்கள். ஓய்வு எடுக்க வேண்டும்!" என்றாள் தேவகி சிடுசிடுப்புடன்.

டாக்டர் பதில் ஒன்றும் பேசாமல் குழந்தைகளோடு உதவி செய்தார்.

"அப்பா !" ஆனந்தம் மெதுவான கெஞ்சும் குரலில் குழைவுடன் அழைத்தாள்.

"என்னம்மா ?" என்று வாஞ்சையுடன் கேட்டு அவளைத் தடவிக் கொடுத்தார் மூர்த்தி.

"தம்பிக்கும் பேபிக்கும்தானு பரிசுப் பொருள்கள் கொடுத்தார்கள்? எனக்கு ஒருத்தருமே ஒன்றுகூடக் கொடுக்கவில்லையா அப்பா ? ஏன் கொடுக்கவில்லை? நான் உங்கள் மாதிரியோ மம்மி மாதிரியோ இல்லை என்று கொடுக்கவில்லை? எனக்கு வந்ததென்று ஒரு சாமான்கூட இல்லையே?" என்று ஏக்கத்துடன் கேட்டாள் ஆனந்தம்.

டாக்டர் விழித்தார்.

தேவகி வெறுப்புடன் ஆனந்தத்தைப் பார்த்தாள். "இங்கே பாருங்கள். ஆனந்தம் வர வர அர்த்தமில்லாத கேள்விகள் ஆயிரம் கேட்கிறாள். பேசாமல் இவளை எங்கேயாவது போர்டிங் கான்வென்டில் சேருங்கள்" என்று படபடவென்று மொழிந்த மனைவியைக் கண்ணினாலேயே கண்டித்தார் மூர்த்தி.

"நீ பேசாமல் ஓய்வு எடுத்துக் கொள். உனக்கு உடம்பில் கோளாறு இல்லை. மூளையில் வந்துவிட்டது.....!" என்று மனைவியைக் கடிந்து கொண்டார். பின்னர் மகளைப் பார்த்து, "ஆனந்த்! நீ ஊரில் தாத்தா வீட்டில் பிறந்தாயல்லவா ? அங்கேயே உனக்கு வந்த பரிசுப் பொருள்களை வைத்துவிட்டு உன்னை மட்டும்தான் கொண்டு வந்தாள் மம்மி !" என்று சமாதானம் சொன்னார்.

ஆனந்தம் தாயின் முகத்தைப் பயத்துடன் பார்த்தாள். அவளருகே வந்தாள்.

"அம்மா, அம்மா! இனிமே நீங்க சொல்றபடி நல்ல பெண்ணாக இருப்பேன் அம்மா !" கண்களில் நீர் ததும்பச் சொன்ன வார்த்தைகள் தேவகியை நெகிழ வைக்கவில்லை. முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"தேவகி! உன்னைப் பற்றித்தான் நான் மிகவும் வருந்துகிறேன். நீ உன்னை திருத்திக் கொள்ளாவிட்டால் எங்களை இழந்துவிட நேரிடும்!" என்று சற்றுக் கடுமையாகச் சொல்லிவிட்டுக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு மாடிக்குப் போய்விட்டார் மூர்த்தி.

தேவகி அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டு சிலையாக உட்கார்ந்திருந்தாள். துக்கம் தொண்டையை அடைக்க வெகுநேரம் அழுது கொண்டிருந்தாள்.

மூர்த்திக்குக் கல்யாணமாகி நாலைந்து வருஷத்துக்கெல்லாம் தேவகிக்கு உடல் நலம் குறையத் தொடங்கியது. அப்பொழுதுதான் டாக்டர் மூர்த்தி மேல்நாடுகளுக்குப் போய், "ஸர்ஜரி" எல்லாம் பாஸ் செய்து தாய்நாடு திரும்பிய புதிது. தொழில் சூடு பிடிக்கும் நல்ல சமயம். அவருக்குக் குருவாக இருந்த பெரிய சர்ஜன் டாக்டர் விசுவம் தமது ஆசியுடன் மூர்த்தியின் நர்ஸிங் ஹோமைத் திறந்து வைத்தார்.

கூட்டம் நிறைய வந்து கொண்டிருந்த சமயத்தில் தேவகியின் உடல்நிலை கவலையைக் கொடுத்தது. பெரிய டாக்டர் விசுவம்தான் மூர்த்தியைத் தேற்றினார். பல டாக்டர்களின் ஆலோசனையைத் தேவகிக்காக நாடினார். தேவகிக்கு எலும்புருக்கி நோய் ஆரம்பம் என்று தீர்மானித்தார்கள்.

டாக்டர் மூர்த்தி இடிந்தே போய்விட்டார். அவரைத் தேற்றியவர் டாக்டர் விசுவம் அவர்கள்தான். சானிடோரியத்தில் தேவகியைச் சேர்த்தவரும் அவரே. ஆரம்பத்திலேயே பார்த்து, வெகு கவனமாக சிகிச்சை அளிக்கப்பட்டதால் தேவகி ஒரு வருஷத்திலேயே பூரண குணமடைந்தாள். மேலும் ஒரு வருடம் தன் பெற்றோர்களிடமிருந்து விட்டுப் பூரண ஆரோக்கியத்துடனும் புது மேனியுடனும் திரும்பி வந்தாள்.

திடீரென்று ஒரு நாள் மூர்த்தியில்லாத சமயத்தில் தேவகியைப் பார்க்க வந்தார் டாக்டர் விசுவம்.

வழியில் தட்டுப்பட்ட வேலைக்காரனிடம் "அம்மா எங்கே இருக்கிறார்கள் ?" என்றார்.

"மாடியில் குழந்தையைத் தூங்கப் பண்ணுகிறார்கள்!" என்று அவன் சொல்லி முடிப்பதற்குள், "என்ன குழந்தையா ?" என்று ஆச்சரியத்துடன் கேட்டு விட்டார். பின்னர் தம் அறியாமையை வேலைக்காரன் அறியக் கூடாது என்று நினைத்து ஆயிர

மாயிரம் கற்பனைகள் அவரைக் குடைய, ஆவல் ஒரு பக்கம் உந்த மாடிக்கு விரைந்தார்.

தேவகி தொட்டிலில் தூங்கும் குழந்தையையே பார்த்துக் கொண்டு நின்றாள். வாய் அவளை அறியாமல் தாலாட்டு ஒன்றை முணு முணுத்துக் கொண்டிருந்தது. டாக்டர் திகைத்து நின்றார்.

''தேவகி!'' என்றுகனிவுடன் கூப்பிட்டார்.

எதிர்பாராமல் வருகை தந்த டாக்டரைக் கண்டதும் ஒருகணம் அயர்ந்து நின்றாள் தேவகி. மறுநிமிஷமே தன்னைச் சமாளித்துக் கொண்டு பயபக்தியுடன் விரைந்து வந்து டாக்டரின் கால்களில் விழுந்து வணங்கினாள். ''டாக்டர்! உங்கள் அன்பினாலும் ஆசியினாலும் நான் புனர்ஜன்மம் எடுத்து மீண்டும் வாழ வந்துவிட்டேன்!'' என்றாள்.

''குழந்தை! உன் கணவன் எனக்கு சிஷ்யப் பிள்ளை மட்டுமில்லே. என் சொந்தப் பிள்ளைக்குச் சமானம். வெகு கெட்டிக்காரனான அவன் வாழ்க்கையில் சீக்கிரம் முன்னுக்கு



வந்து கொண்டிருக்கும் போது இப்படி ஒரு சோதனை வந்துவிட்டதே என்று நான் வருந்தாத நாள் இல்லே. அதெல்லாம் போகட்டும், குழந்தை பிறந்ததை எப்படி என்னிடம் மறைத்தான்? என்ன குழந்தை? என்ன பெயர்?'' என்று மூச்சு விடாமல் கேட்டு விட்டுக் குழந்தையை எடுத்துக் கொஞ்சி விட்டு மீண்டும் தொட்டிலில் விட்டார் டாக்டர்.

தேவகி ஒரு கணம் தன் நிலையை இழந்து மீண்டும் உணர்வு பெற்றாள்.

''டாக்டர்! உங்களிடம் மறைப்பதற்கு நாங்கள் அப்படி நன்றி மறந்தவர்கள்

இல்லே. இன்று இவரே உங்களிடம் வந்து எல்லா விஷயத்தையும் சொல்லிவிட்டு இந்த ஆறு மாதச் செல்விக்கு உங்களேப் பெயர் வைக்கச் சொல்ல இருந்தார். நீங்களே அதற்குள் வந்துவிட்டீர்கள்!'' என்ருள் தேவகி.

''தேவகி! ஆறுமாதமாகியும் இந்தச் செல்வத்துக்குப் பெயர் சூட்டவில்லேயா? இனி உனக்கும் மூர்த்திக்கும் ஆனந்தத்தைத் தவிர வேறு ஒன்றுமே இருக்கக் கூடாதம்மா! உங்கள் இருவருக்கும் 'ஆனந்தத்தைக் கொடுத்த இவள் பெயர் 'ஆனந்தம்' என்றே இருக்கட்டும்....!'' என்று சொல்லி விட்டு அவளிடம் விடைபெற்றுக்கொண்டார்.

டாக்டர் நேராக மூர்த்தியின் நர்ஸிங் ஹோமுக்கு விரைந்தார்.

''கன்கிராட்ஸ், மூர்த்தி!'' என்று கைகளே நீட்டியவண்ணம் வந்தவரிடம் ஒன்றும் புரியாமல் கைகளேக் கொடுத்தார் மூர்த்தி.

''மூர்த்தி! இன்று நான் அடைந்த சந்தோஷம் என்றுமே அடைந்ததில்லே. தேவகியைப் பார்க்க வீட்டுக்குப் போயிருந்தேன். குழந்தை பிறக்கப் போவதையோ, பிறந்ததையோ ஏன் என்னிடம் சொல்லவில்லே, மூர்த்தி ? இன்னும் ஐந்து வருடத்துக்குக் குழந்தை கூடாது என்று சொன்னதற்காக என்னிடம் மறைத்தாயா? சின்ன தேவகி மிகவும் அழகுள்ள குழந்தை. அவளுக்கு, 'ஆனந்தம்' என்று பெயர் வைத்துவிட்டுத் தான் வந்தேன்!'' என்று மூச்சு விடாமல் பேசிக் கொண்டு போகும் ஆசானே எப்படி நிறுத்துவதென்று தெரியவில்லே மூர்த்திக்கு.

''ஸார் ! உங்களுடன் நான் கொஞ்சம் தனியே பேச வேண்டும்.''

இருவரும் மூர்த்தியின் அந்தரங்க அறைக்கு சென்றனர்.

அரைமணி நேரம் சென்றபின் இருவரும் வெளியே வந்தபொழுது இருவர் முகங்களுமே மாறிப் போயிருந்தன. மனத்திலிருந்தபெரும் பாரத்தை இறக்கி வைத்த திருப்தி மூர்த்தியின் முகத்திலும், புது விஷயங்களேச் சற்றும் எதிர்பாராத முறையில் விழுங்கிக் கொண்டு ஜீரணிக்க முடியாமல் தவிக்கும் வியப்பு பெரிய டாக்டரிடமும் இருந்தன.

ஆனந்தம் பெற்ருேர்களுக்கு நாளுக்கொரு புதிய ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தாள். நான்காம் வயதிலேயே உயர்தர ஆங்கிலக் கான்வென்டில் சேர்த்தார்கள். கண்டிப்பும், நல்ல உயர்தரப் படிப்பும் அவளேப் பண்புள்ள பெண்ணுக வளர்த்துக் கொண்டு வந்தன.

ஆனந்தத்துக்கு ஐந்து வயது நடக்கும் பொழுது தேவகி கர்ப்பம் அடைந்தாள்.

டாக்டர் விகவம் எதிர்பார்த்தபடியே அறுவை சிகிச்சை மூலம் தான் குழந்தையை வெளிக் கொண்டுவர முடிந்தது. பிறந்த ஆண் குழந்தைக்குப் பெயர் பிரகாஷ் என்று பெயர் சூட்டினுர் டாக்டர் விகவம்.

பிரகாஷுக்கு ஐந்து வயதான போது தேவகி மீண்டும் கருவுற்ருள். இந்த முறையும் அறுவை மூலம்தான் சிசுவை எடுக்கவேண்டும் என்று அறிந்த பெரிய டாக்டர் அவளுக்கு மயக்கம் கொடுப்பதற்குமுன் அவளிடமே நிலேமையைச் சொன்னுர்.

''அம்மா ! தேவகி! இந்தப் பிரசவம் தான் உனக்குக் கடைசிப் பிரசவம். அதற்கு வேண்டியவைகளேச் செய்யப் போகிறேன். உனக்குத்தான் ஏற்கனவே ஒரு பெண்ணும் ஒரு பிள்ளையும் இருக்கிருர்களே! சம்மதம் தானே!'' என்ருர். அறுவை நடந்தது.

தேவகிக்கு மயக்கம் தெளிந்தவுடன் பெரிய டாக்டர் அவளிடம் வந்து அவள் உடல்நிலேயைச் சோதித்தபின்னர், ''தேவகி, பெண் குழந்தை பிறந்திருக்கிறுளம்மா ! ஆனந்தத்துக்குத் துணே வந்துவிட்டாள். சம்பூர்ணமாக்கி விட்டாள் உங்கள் வாழ்க்கையை!'' என்ருர் மகிழ்ச்சியுடன்.

கணவரைப் பார்த்து வெற்றிச் சிரிப்புச் சிரித்தாள் தேவகி.

''அப்பாடா ! என் இஷ்டம் நிறைவேறியது!'' என்று சொன்ன மனைவியிடம் பதில் சொல்லத் தெரியாமல் நின்ருர் மூர்த்தி. அவர் மனத்தில் திகில் பரவியது.

மூர்த்திக்குப் பழைய நினைவுகள் ஒன்றன் பின் ஒன்ருகவந்து மூளையைக் குழப்பின. 'நல்ல காலத்துக்கு இந்தக் குழந்தை பிறக்கவில்லே' என்று வாயைவிட்டுச் சொன்னுர். ஆனந்தத்தையும் பிரகாஷையும் தடவிக் கொடுத்துவிட்டு அவர் படுக்கைக்குச் செல்லும் பொழுது நள்ளிரவாகி விட்டது.

மறுநாள் காலே காப்பியை எடுத்துக் கொண்டு கணவனிடம் சென்ற தேவகியின் முகத்தில் தனியான சோபை ஒளிர்ந்தது. தனக்கென தன்னுடையவளாக ஒரு பெண் பிறக்க வேண்டுமென்று கனவு கண்டு கொண்டிருந்தவளுக்கு அது நனவாகிப் போனதில் மகிழ்ச்சி இருக்கத்தானே செய்யும்? ''என் இஷ்டப்படி எனக்குப் பூரணி பிறந்தாளே, நான் அதிர்ஷ்டசாலிதானே?'' என்ருள் பெருமிதத்துடன்.

மூர்த்தி ஆவேசமாகப் பேசினுர் :

''தேவகி! உன் அதிர்ஷ்டத்தைப் பூரணி பிறந்ததிலிருந்துதான் தெரிந்து கொள்ள வேண்டுமா? உனக்கு இந்த ஜன்மத்தில் குழந்தை பிறக்காது, பிறக்கவும்கூடாது என்று டாக்டர்கள் ஒருமுகமாக நீ சானிடோரியத்தில் இருக்கும் பொழுது சொன்னுர்களே, நினைவிருக்கிறதா தேவகி? அப்போது உன் மனசு என்ன பாடுபட்டது? அதற்கு நான் என்ன சொன்னேன், நினைவிருக்கிறதா? 'தேவகி! உனக்கு முதலில் உடம்பு தேறட்டும். நீ கொஞ்சி மகிழ ஒரு குழந்தையை நான் வரவழைக்கிறேன். நீ பெருமலே அம்மாவென்று கூப்பிட்டு உன்னே மகிழ்விக்க ஒரு குழந்தை வரும்' என்று சொன்னேன். நீ எத்தனே சந்தேகத்துடன் என்னேப் பார்த்தாய்?''

தேவகி நடுநடுங்கி நின்றுகொண்டிருந்தாள்.

''முதலில் உன் உடம்பு தேறட்டும், குழந்தையைப் பற்றிக் கவலே வேண்டாம் என்றேன். உன் உடல் நிலேயும் சரியாகப் போய் விட்டது. உன் இஷ்டப்படி நான் வாக்குக் கொடுத்தபடி உனக்கு ஆனந்தம் குழந்தை உருவத்தில் வந்தாள். இப்போது ஏன் உனக்கு இந்தச் சபலம்? ஆனந்தத்துக்குத் துரோகம் செய்யக் கனவில்கூட நினேக்காதே'' என்று சொல்லிப் போய்விட்டார்.

தேவகியின் தாம்பத்திய வாழ்வில் இப்படி ஒரு சர்ச்சை நடந்ததில்லே. கணவரை

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது

இவ்வளவு ஆத்திரமடையச் செய்துவிட்டோமே என்று உள்ளூற வருந்தினாள்.

''குட்மார்னிங் மம்மி!'' என்று ஆனந்தமும் பிரகாஷும் இரட்டை நாயனங்கள் போல ஒலித்துக் கொண்டு மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து, தாயாரின் இரு பக்கங்களிலும் உட்கார்ந்தார்கள். பிரகாஷ் தன் தாயைப் பார்த்தான். சகோதரியைப் பார்த்தான். ''அம்மா! அக்கா ஹாஸ்டலில் சேரப் போகிறாளா?'' என்று கேட்டான்.

தேவகி திகைத்துப் போனாள். ''யார் சொன்னார்கள்?''

''அப்பாதான் சொன்னார். அக்காவிடம் வந்து நீ 'ஹாஸ்டலில் சேர்ந்துவிடணும். அங்கே சமத்தா யிருக்கணும்' என்றார். அக்கா இல்லாம என்னாலே தனியா ஸ்கூலுக்குப் போக முடியாது. என்னையும் ஹாஸ்டலில் சேர்த்துவிடு!'' என்று மிழற்றினான்.

தேவகிக்கு மூச்சே நின்று விடும்போல் இருந்தது. கணவரிலிருந்து குழந்தைகள்வரை இது என்ன கலாட்டா?

ஆனந்தம், தாயின் முகமாறுதல்களைப் பார்த்துக் கொண்டிருந்தவள், அழுகை விம்மலாக வெளிப்படத் தாயின் மடியில் முகத்தைப் பதித்துக்கொண்டு கேவி அழுதாள்.

''அம்மா, நான் இனிமேல் தப்பு பண்ணலை அம்மா! என்கிட்டே கோபமாக இருக்காதேங்கோ அம்மா! நான் நூறுதரம் ''ஸாரி'' சொல்றேன் அம்மா!'' என்று விசும்பிக்கொண்டே இருந்தாள். தேவகி ஆனந்தத்தை இழுத்து அணைத்துக் கொண்டாள்.

சாயங்காலம் தன் வீடு தேடி வந்த டாக்டர் விகவத்தின் மனைவியைக் கண்டதும் மரியாதையுடன் தேவகி அந்தம்மாளை நமஸ்காரம் செய்துவிட்டுக் குழந்தையைஅவர்களிடம் கொடுத்தாள்.

ஆசி கூறினாள் டாக்டரின் மனைவி. சிறிது லோகாயதமாகப் பேசிய பிறகு ''அதிருக்கட்டும். இன்றைக்குக் காலையில் மூர்த்தி வீட்டுக்கு வந்திருந்தார். ஆனந்தத்தை ஏதாவது போர்டிங்ஸ்கூலில் சேர்க்க வேண்டும், எங்கே சேர்த்தால் தேவலை என்று கேட்டுக் கொண்டிருந்தார். டாக்டர் கோடைக்கானலில் சேர்க்கலாமே என்றார். உண்மையாகவே அவளை போர்டிங் ஸ்கூலில் சேர்க்கப் போகிறாயா?'' என்று அந்தம்மாள் கேட்டவுடன் தேவகி ஒரு நிமிஷம் அயர்ந்துதான் போனாள்.

தனக்குத் தெரியாமல் இவ்வளவு தூரம் வந்துவிட்டாரா கணவர் என்று மனத்துக்குள் வெகுண்டாள். தானும் அவருக்குச் சளைத்ததாகக் காட்டிக் கொள்ளக்கூடாதென்று நினைத்தாள்.

''அவர்தான் போர்டிங்கில் சேர்த்தால் குழந்தைக்கு நல்ல வழக்கங்கள் எல்லாம் வரும் என்று ஒரே பிடிவாதமாக இருக்கிறார்!'' என்று ஒரு போடு போட்டாள்.

''அப்போது ஆனந்தத்தைப் பிரிந்து உன்னால் இருக்க முடியுமா தேவகி? பெண் குழந்தையை விடுவதைவிடப் பிரகாஷை ஹாஸ்டலில் சேர்க்கலாமே? உனக்கு மூன்று குழந்தைகளைக் கவனிக்க முடியாதென்றுதானே இந்த ஏற்பாடு?'' என்று விடாமல் கேட்டாள் விகவத்தின் மனைவி.



''நான் இந்த வீட்டுக்குக் குடிபுக வந்தபோது 'புருஷன் மனைவி ஒரு குழந்தைக்கு மேல் உள்ளவர்களுக்கு போர்ஷன் விடுவதில்லை' என்று கூறினீர்களே! நினைவிருக்கிறதா?''

'' ஆமாம்! அதற்கென்ன இப்போ ?''

'' என் மனைவிக்கு இரட்டைப் பிரசவமாகி விட்டது. குழந்தைகளை நீங்களே வைத்துக் கொள்கிறீர்களா ?''

---

தேவகியின் மனத்திலிருந்த கலக்கங்கள் எல்லாமாகச் சேர்ந்து அவள் மண்டையைக் குழப்பின. என்ன சொல்கிறோம் என்று தெரியாமலே, ''ஐயோ! பிரகாஷ் என் குழந்தை! அவனை எப்படி அங்கு விட்டிருப்பேன் ?'' என்று கூவிவிட்டாள்.

டாக்டரின் மனைவி சற்றும் சளைக்காமல், ''அப்படியானால் ஆனந்தம் யார் பெற்ற குழந்தை ?'' என்று கேட்டாள்.

தேவகி நிலைதடுமாறிப்போனாள். ''அம்மா! ஆனந்தம் என் குழந்தை என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? இல்லவேஇல்லை. அவள் என் வளர்ப்புக் குழந்தை. அநாதை ஆசிரமத்திலிருந்து கொண்டு வந்தோம் அம்மா !'' என்று படபடத்தாள்.

''தேவகி! ஆனந்தம் உன் குழந்தை இல்லையா, சரிதான். எப்போது உனக்குப் பிடிக்க வில்லையோ உன் இஷ்டப்படியே செய்து விடலாம். கொடைக்கானல், ஊட்டி என்று போர்டிங்கில் சேர்த்தால் ஏகப்பட்டது செலவாகும். கண்ட அநாதைகளுக்கு ஏன் அப்படிச் செலவழிக்க வேண்டும்? பேசாமல் அவளை மீண்டும் அநாதை ஆசிரமத்துக்கே அனுப்பி விடேன்!'' என்று குத்தலாகச் சொன்னாள் மிஸஸ் விகவம்.

'' அம்மா ! என்னைக் கொல்லாதீர்கள். எனக்கென்று குழந்தைகள் பிறந்த பிறகு யார் பெற்றதோ, நம் குழந்தைகளுக்குச் சரியாக இருக்கிறதே என்று ஓர் எண்ணம் வந்து விட்டதென்னவோ வாஸ்தவம். ஆனால் அவளை அநாதை ஆசிரமத்தில் சேர்க்க அநுமதிக்கவே மாட்டேன்'' என்று சொல்லி அழுதாள் தேவகி.

மிஸஸ் விசுவம் வீட்டுக்குத் திரும்பிய பொழுது அங்கே தம் கணவருடன் மூர்த்தியும் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். நடந்ததை வேதனையுடன் விவரித்தாள்.

மூர்த்தி தலையில் கையை வைத்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டார்.

திடீரென்று பெரிய டாக்டர் துள்ளினார். "மூர்த்தி! இதற்கு ஒரே வழிதான் எனக்குப் படுகிறது. அதுதான் அதிர்ச்சி வைத்தியம். அது இந்தக் கேஸில் நல்ல பலன் கொடுக்கும்!" என்று கூவினார் சந்தோஷத்தோடு.

இரு டாக்டர்களுமாகச் சிறிது நேரம் எதையோ சர்ச்சை செய்தார்கள்.

மூர்த்தி சிறிது தெம்புடனும் நம்பிக்கையுடனும் இருவரிடமும் சொல்லிக் கொண்டு கிளம்பினார்.

"நாளை சாயங்காலம் இங்கு வந்துவிடு!" என்று சொல்லி விடைகொடுத்தனுப்பினார் டாக்டர் விசுவம்.

மறுநாள் காலையில் மூர்த்தி வழக்கத்துக்கு விரோதமாக, சீக்கிரம் எழுந்து வந்தார். நேராகத் தேவகியின் அறைக்குச் சென்றார்.

"தேவகி! நான் சாயங்காலம் நர்ஸிங் ஹோமிலிருந்து வீட்டுக்கு வரமாட்டேன். நாளை கொடைக்கானலில் மெடிகல் கான்ஃபிரன்ஸ் நடக்கிறது. வருவதற்குக் குறைந்தது மூன்று நான்கு நாட்களாகும். உன் உடம்பை அலட்டிக் கொள்ளாதே! குழந்தைகளைப் பார்த்துக் கொள்!" என்று சொல்லி விட்டுக் கைக் குழந்தையின் கன்னத்தைத் தடவிக் கொஞ்சினார்.

தேவகிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. மூர்த்தி பழையபடி தன்னிடம் சந்தோஷமாகப் பேசுகிறார் என்று பூரித்துப் போனாள்.

"அங்கேயே ஆனந்தத்தின் அட்மிஷன் விஷயமாக விசாரித்துக் கொண்டும் வரலாம் என்று இருக்கிறேன்!" என்று தேவகியின் முகத்தையே பார்த்தார்.

தேவகியின் முகம் கறுத்துச் சிறுத்தது. வேதனையினால் கண்களை மூடிக் கொண்டு பெருமூச்சு விட்டாள். "அட்மிஷனுக்கு இப்பொழுது என்ன அவசரம்? அவளை விட்டு விட்டு இருக்கமுடியும் என்றுதோன்றவில்லை!" என்று மெதுவாகச் சொன்னாள் தேவகி.

"உனக்குச் சம்பந்தமில்லாத அநாதையை விட்டு விட்டு உன்னால் இருக்க முடியாது என்று நீ சொல்வதை நம்பச் சொல்கிறாயா? நேற்று டாக்டர்வீட்டில் அம்மாகேட்டார்கள். 'ஆனந்தம் உன் பெண்ணில்லையா?' என்று. அவளை உன் பெண் இல்லை என்று எப்போது வாய்விட்டுச் சொல்ல ஆரம்பித்து விட்டாயோ, அப்போதே உனக்கும் அவளுக்கும் தொடர்பு விட்டுப் போய்விட்ட மாதிரி தான். ஆனந்தத்துக்கு இந்த விஷயம் தெரிந்து அந்தப் பிஞ்சு உள்ளம் உடைந்து போவதற்குள் நானே ஒரு ஏற்பாடு செய்து விடுகிறேன்!" என்று சொல்லிக் கிளம்பினார்.

தேவகியின் தலை சுற்றியது.

நர்ஸரி வகுப்பானதால் பிரகாஷுக்குப் பகல் ஒரு மணி வரைதான் பள்ளி. கார் போய்ப் பிரகாஷை அழைத்துக்கொண்டு வந்து விட்டது. பிரகாஷ் வந்து சாப்பிட்டுவிட்டுத் தாயின் அருகில் படுத்துக் கொண்டான்.

வழக்கம் போல் மூன்றரை மணிக்கு ஆனந்தத்தை அழைத்துவர, காரை அனுப்பிவிட்டுக் காத்திருந்தாள் தேவகி.

பள்ளிக்குச் சென்ற கார் ஆனந்தம் இல்லாமலே திரும்பி வந்தது.

"குழந்தை யார் காரிலேயோ வீட்டுக்குப் போய் விட்டதாகப் பள்ளிக்கூடத்தில் சொன்னார்களே! இன்னுமா வர வில்லை?" என்று டிரைவர் கேட்டான்.

தேவகி திடுக்கிட்டாள். "என்னது! யார் காரிலேயோ போனாளா? அந்த வழக்கமே ஆனந்தத்துக்குக் கிடையாதே! எத்தனை மணியானாலும் நம் காருக்காக அவள் காத்திருப்பாளே தவிர இன்னொருவர் காரில் ஏறமாட்டாளே!" என்று கூறிக் கலங்கினாள்.

ராத்திரி ஒன்பது மணி வரை ஒரு தகவலும் கிடைக்கவில்லை. குழந்தையும் வீடு வந்து சேரவில்லை.

தேவகியின் புலம்பல் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டு வந்தது. குழந்தை பசி பொறுக்க மாட்டாளே என்று ஒருதரம் புலம்பினாள். குழந்தை தன்னைவிட்டு இருக்க மாட்டாளே என்று அழுதாள். இரவு முழுதும் தூக்கம் இல்லாமலே கழிந்தது.

மறுநாள் காலை பெரிய டாக்டரின் மனைவி வந்தாள். "அம்மா! என் ஆனந்தம் வர வில்லையே!" என்று கதறினாள் தேவகி.

"சும்மா, உடலை வருத்திக் கொள்ளாதே, தேவகி! ஆனந்தம் வராததுகூட நல்லதுதான். கடவுளே உன் விஷயத்தில் நல்லது பண்ணி இருக்கிறார் என்று நினைத்துக் கொள்ள வேண்டியதுதான்!" என்று மிஸஸ் விசுவம் சொல்லி முடிப்பதற்குள் தேவகி காளிமாதிரி ஆனாள்.

இரு கண்களையும் பயங்கரமாக உருட்டி விழித்துக் கொண்டு கோரமானதொரு சப்தம் தொண்டையிலிருந்து வர அப்படியே மயக்கமாக விழுந்து விட்டாள்.

இயற்கை அன்னை தன் பூரண அருளையும் அள்ளி வீசிக்கொண்டிருக்கும் கொடைக்கானலின் ஏரிக் கரையில் டாக்டர் மூர்த்தி ஒரு சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்திருந்தார். அருகில் ஆனந்தம் பறிகொடுத்தவள் மாதிரி உட்கார்ந்திருந்தாள்.

டாக்டர் விசுவமும் மூர்த்தியும் சேர்ந்து செய்த யோசனைதான் இது. ஆனந்தத்தைப் பள்ளிக்கூடத்திலிருந்து நேராகக் கொடைக்கானலுக்கு மூர்த்தி கூப்பிட்டுக் கொண்டு வந்து விடவேண்டியது. அவளைக் காணாமல் தேவகி தவிப்பாள். அதில் பழைய பாசம் மீண்டும் சுரக்கும். குடும்ப நிலை அமைதியாகிச் சரியாகப் போய்விடுமென்பது அடிப்படை கருத்து.

கொடைக்கானலுக்குத் தன்னைக் கடத்திச் செல்வதைப் போல் அழைத்துக் கொண்டு வந்ததைக் கண்டு ஆனந்தம் திகைத்துப் போனது மட்டுமல்ல, ஏங்கியும் போய்க் கொண்டிருந்தாள். கொடைக்கானலில் ஒரு இடத்தையும் அவள் சந்தோஷமாகப் பார்க்கவோ ரசிக்கவோ இல்லை.

அப்பாவும் பெண்ணும் தாங்கள் தங்கி இருந்த வீடுக்கு வந்தனர். அங்கு மூர்த்திக்கு ஒரு தந்தி வந்தது. "தேவகி அபாயம்

உடனே புறப்படு. விசுவம்!'' உடனேயே காரைத் தயார் செய்யச் சொல்லி ஆனந்தத்துடன் சென்னைக்குப் புறப்பட்டார் மூர்த்தி.

சென்னையில் வீடே சூனிய நிலையாக இருந்தது. பிரகாஷ் வாசலிலேயே நின்றவன் ஆனந்தத்தைப் பார்த்ததும், ''அக்கா !'' என்று கட்டிக் கொண்டான். இரண்டு நாள் பிரிவைத் தாங்க முடியாமல் தமக்கையைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தான்.

''அக்கா ! மம்மிக்கு ஜுரம். டாக்டர் ஊசியாகக் குத்துகிறார். பேபி அழுதான்டே இருக்கு! நானும் நீ இல்லாம சாப்பிடவே இல்லே!'' என்று மழலை மொழிந்தான்.

மூர்த்தி பதை பதைக்கும் உள்ளத்துடன் தேவகி படுத்திருந்த அறைக்குள் சென்றார்.

பெரிய டாக்டரும் அவர் மனைவியும் அங்கு இருந்தார்கள்.

தேவகி விழித்த நாராகப் படுத்துக் கொண்டிருந்தாள். மூர்த்தி வேகமாகப் போய் அவள் நாடித் துடிப்பைப் பார்க்கக் கையைத் தொட்டார்.

தன் கையை யாரோ தொடுவதை உணர்ந்த தேவகி அப்படியே எழுந்து படுக்கையில் உட்கார்ந்தாள். கனல் தெறிக்கக் கண்மணி மாதிரி கண்களை உருட்டினாள். ''யாரும் என்னைத் தொட வேண்டாம்'' என்று கத்தினாள்.

''என் ஆனந்த் எங்கே? என் குழந்தையைக் கொண்டு வாருங்கள். கண்மணி ! ஆனந்த் ! என் மேலே கோபமா ராஜாத்தி! என்னை விட்டுவிட்டு எங்கே போய்விட்டாய்?'' என்று அழுதாள். பின்னர் கடகட வென்ற ஒரே சிரிப்பு. மூர்த்திக்கு இந்தக் கொடுமையைப் பார்க்கச் சகிக்கவில்லை.

டாக்டர் விசுவம் ஒரு இன்ஜெக்ஷன் கொடுத்தவுடன் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கினாள் தேவகி.

மூர்த்தியின் அருகே வந்த விசுவம் அவர் தோள்களை ஆ த ர வு ட ன் பற்றினார். ''மூர்த்தி ! தேவகிக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்ய நினைத்தோம். அவள் நமக்கு அதிர்ச்சியை உண்டாக்கி விட்டாள். அவள் மனம் ஒரே குழப்பமாகக் குழம்பிவிட்டது. நீ யார், நான் யார் என்று தெரிந்து கொள்ள முடியாத மோன நிலைக்கு வந்துவிட்டாள். ஞானிகளின் நிலையில் இருக்கிறாள்!'' என்றார்.

அவர் மனைவி குனிந்த தலை நிமிராமல் கண்ணீர் வழிய நின்று கொண்டிருந்தாள்.

வாய்விட்டு அழுதார் மூர்த்தி.

''தைரியத்தைக் கைவிடாதே, மூர்த்தி ! நாம் இன்னும் முயற்சி செய்து அவளைக் குணமடையச் செய்வோம். உடனே இல்லாவிட்டாலும் நாளடைவில் சரியாகிவிடும் !'' என்று தேற்றினார் பெரிய டாக்டர்.

''கடவுளே! நானோ, தேவகியோ என்ன பாவம் செய்திருந்தாலும் அதற்காக இந்தப் பச்சிளம் குழந்தைகளிடம் வன்மம் வைக்காதே. இக்குழந்தைகளுக்குத் தாயின் அரவணைப்பைக் கொடு. இந்த வீட்டில் அமைதியும் ஆனந்தமும் நிலவச் செய்!'' என்று நெக்குருகப் பிரார்த்தித்தார் மூர்த்தி. குழந்தைகளும் தந்தையின் முகத்தையே பார்த்துக் கொண்டு அம்மா குணமாக வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள்.

# பஞ்சாமிர்தம்

ஒரு மணி தாமதமாக வந்தபடியால், கோவையில் ஆரம்பமான அ. இ. மோட்டார் சைக்கிள் பந்தயத்தை அமைச்சர் திரு முத்துசாமியினால் தொடங்கி வைக்க இயலவில்லை. பந்தய மைதானம் நுழைவாயிலுடன் அவர் திரும்பிவிட வேண்டியதாயிற்று.

—செய்தி

போகட்டும்! இந்தப் பந்தயத்தில் எல்லாருக்கும் முன்னதாக வெளியே வந்துவிட்ட பெருமையை அமைச்சர் சுலபமாகத் தட்டிக் கொண்டு விட்டாரல்லவா ?

ஃ ஃ ஃ

லண்டனில் தமக்கு அளிக்கப்பட்ட ஒரு விருந்தில் பேசும் போது, உதவிப் பிரதமர் தேசாய், ''இந்தியாவில் பட்டினி நிலைமை சிலர் கூறுவது போல் மோசமான நிலைமையை அடைந்துவிட வில்லை'' என்றார். — செய்தி

'ஏன்? விருந்துக்கு வந்தவர் பட்டினி என்று கருதி அதிகமாகப் பரிமாறினார்களோ?' என்று கேட்கிறார் இங்குள்ள உபவாசி!

ஃ ஃ ஃ

''மதிய உணவு நிதிக்குப் பணம் திரட்ட, கிராமப் பள்ளிக்கூடங்களில் உண்டிப் பெட்டிகளை வைக்கலாம்''

—சென்னை கல்வி அமைச்சர்

''வயிற்றுக்கு உண்டிதர இந்தப் பெட்டிகள் உபயோகமாகும் என்பதால்தான் முன்பே, 'உண்டிப் பெட்டிகள்' என்று பெயர் வைத்திருப்பார்களோ?'' என்று வினவுகிறான் ஒரு சிறுவன்.

ஃ ஃ ஃ

காசி சர்வகலாசாலை மாணவர்கள், உயிருக்குத் தவித்துக் கொண்டிருந்த ஆயிரம் கால்நடைகளை வெள்ளத்திலிருந்து காப்பாற்றினார்கள். — செய்தி

''காசியில் உயிர் விடும் புண்ணியத்தை இப்படித் தடுக்கலாமா?'' என்று கண்ணீர் விடுகிறது ஓர் ஓநாய் !

ஃ ஃ ஃ

'' 'பந்த்' போன்ற கிளர்ச்சிகளினால் விளைச்சலைப் பெருக்க முடியாது'' — கேரள கவர்னர்.

இது தெரிந்தும், அரிசிக்காக பந்த் போன்ற கிளர்ச்சிகளைச் சிலர் ஏன் விளைவிக்கவேண்டும்?

ஃ ஃ ஃ

மாணவர்கள் கோரிக்கைக்கு இணங்க, சென்னைத் தியேட்டர்களில் இந்திப் படங்கள் காட்டுவதை உரிமையாளர்கள் நிறுத்தியுள்ளனர். — செய்தி

பிறர் உதவியின்றித் தானாகவே நிற்கும் நிலையிலிருந்த படங்களுக்கு மாணவர்கள் கோரிக்கை ஒரு நல்ல சாக்குப் போக்காகவே அமைந்திருக்கும்! — ஜோக்கி

"குப்பையிலே மலர் கொஞ்சும் குருக்கத்திக் கொடியைப்" போல் பல வளைவுகளும் மேடு பள்ளங்களும் குட்டிச்சுவர்களும் நிறைந்த அந்தத் தெருவில் எங்களுடைய 'டிராயிங் மாஸ்டரி'ன் வீடு மட்டும் என்றும் அழியாத 'எழுது சித்திரம்' போல அழகாக இருந்தது.

அந்தச் சித்திர ஆசிரியர் கரும் பலகையில் ஒரு சதுரப் பெட்டியின் படம் ஒன்று வரைந்தால் அது எத்தனை சுத்தமாக இருக்குமோ அத்தனை சுத்தமாக இருந்தது அவரது வீடும். கனகலிங்கம் அன்றும் இன்றும் என்றுமே ஒரு 'டிராயிங் மாஸ்டர்'ராக இருக்கலாம்; ஆனால் அவரது வாழ்க்கையும் என்றுமே இப்படி டிராயிங் போட்டது போல் ஒரே சீருடன் இருப்பதுதான் ஆச்சரியம்!




அன்று பிற்பகல்தான் சொந்த ஊருக்கு வந்திருந்தேன் நான். அதிலும் சுமார் பன்னிரண்டு வருடங்களுக்கு அப்புறம் வந்திருக்கிறேன்.

நான் கனகலிங்கத்தின் மாணவன்தான். ஆனால் அவருக்கும் எனக்கும்தான் இடையில் எத்தனை வித்தியாசம் !

கனகலிங்கம் ஒரு 'டிராயிங் மாஸ்டர்' ; நானோ இன்றைய நிலையில் ஒரு பிரபல சித்திரக்காரன்.

எனது பல்வேறு சித்திரங்களைக் கனகலிங்கம் சஞ்சிகைகளிலும் காலண்டர்களிலும் விளம்பரங்களிலும் பார்த்திருக்கலாம்; நான் ஈட்டியுள்ள புகழும் பொருளும் அவருடைய மாணாக்கனுடைய பெருமையைப் பற்றி அவரை விம்மிதமடையவும் செய்யலாம்.

ஆனால் —

'பிள்ளைகளே ! இதோ, கரும் பலகையைப் பாருங்கள் ! ஒரு சின்ன வட்டம் ; இதனடியில் ஒரு பெரிய வட்டம்; ஒரு சின்ன வால்.... இது என்ன சித்திரம்!' என்று அவர் கூவ, 'எலியோ எலி' என்று மாணாக்கர்களாகிய நாங்களும் கத்த —

அது அந்தக் காலம். என் நெஞ்சில் ஊறியிருந்த — என் குடும்பத்தார் என்னுள் இருந்த 'தெய்வாம்சம்' என்று போற்றியிருந்த — 'ஒரிஜினலிடி'யைப் பற்றிக் கனகலிங்கம் அறிந்திராத காலம்தான்.

நான் இப்படி ஒரு பிரபல ஓவியனாக வருவேன் என்று அவர் நிச்சயம் எதிர்பார்த்திருக்க மாட்டார்.

ஆனாலும் இதோ என் எதிரே அவருடைய சிறிய, அழகான வீட்டைப் பார்க்கிறேன். கரும் பலகையில் அவர் வரையும் 'சுத்தமான' டிராயிங்கைப் போலிருந்த வீடு. கிராமத்திலேயே சுமார் இருபதாயிரத்துக்கு மதிப்புப் பெறும் என்றால் நான் வதியும் பட்டணத்தில் இதன் மதிப்பு முப்பதாயிரத்துக்கும் மேலே போகுமே !

கனகலிங்கத்தின் அந்தச் சீரான வாழ்க்கை எனக்கு இப்போது ஏன் பிரமிப்பைத் தருகிறது? சிருஷ்டிக்கிற ஒரு சிறைக்கோட்டத்தில் அடைபட்டு, அதனின்று விடுபட ஒவ்வொரு கணமும் எனது கற்பனா சக்தியின் வேதனைகளினால் உந்தப்பட்டு கலைப் படைப்புக்களை செய்துவரும் கலைஞனான நான் கிடைத்ததைச் செலவு செய்து கொண்டிருந்தேன். கிடைத்தது நிறைய; செலவு செய்ததும் நிறைய.

ஆனால் இவர்? சிருஷ்டிகளின் வேதனை இவருக்கில்லை. ஆனாலும் சீரான வாழ்க்கை; அமைதியான நடப்பு. வீடும் நிலமும்—எல்லாம் இவருக்கு மாற்றமுடியாதபடி அமைந்துவிட்ட ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள்....

நான் ஊருக்கு வந்ததும் என்னை 'பேட்டி' காண வந்தவர்கள் எத்தனையோ பேர். 'ஊரே ஒரு பிரபல சைத்ரீகனை ஈன்றதால் பெருமைப் பட்டிருக்கிறது...' என்றார்கள் அவர்கள். ஆனால் இந்தக் கனகலிங்கத்தின் அமைதியான வாழ்க்கை என் மனத்தில் ஏதோ கோடிட்டுக் கொண்டே இருக்கிறதே ?

கனகலிங்கம் வெளியூர் போயிருந்தார். திரும்பி வர இன்னும் இரண்டு நாட்கள் ஆகும் என்று தெரிந்தது. நான் ஊரில் இருக்கப் போவதோ ஒரு வார காலத்துக்குத்தான். அதற்குள் அவரைப் பார்த்துவிடலாம் என்றே தோன்றிற்று.

ஒரு படம்கூட எழுதாமல் 'ரெஸ்ட்' எடுக்கவே ஊருக்கு வந்திருந்தேன். இலேசான இரத்த அழுத்தம் இருந்ததால் டாக்டரின் உத்தரவுப்படி படம் எழுதும் சிந்தனையைக்கூட மனத்திலிருந்து அகற்றி ஓய்வு பெற முயற்சி செய்துகொண்டிருந்தேன். வயதான தாயாரின் தொண தொணப்பு இருக்கும் என்று தெரிந்திருந்தும் கிராமம் வந்தேன். கலைத்தேவி கொலு வீற்றிருக்கும் உள்

எத்தில், ஓர் இதயத் தேவியையும் இருத்திப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அந்த வயதான தாயாருக்கு.

ஒரே மகனுக்குத் திருமணம் செய்து களிக்க வேண்டும் என்று எந்தத் தாய்க்குத் தான் விருப்பம் இருக்காது ?

கனகலிங்கத்தின் வீட்டுக்குச் சென்றேன் என் சித்திர ஆசானின் வீட்டு நடுக்கூடத்தில் நின்ற நான் ஆச்சரியத்தால் மலைத்தேன். அங்கே பட்டுப் பாயில் அமர்ந்து கொண்டு, ஒரு வீணையைத் தன் மடியில் வைத்துக் கொண்டு தனது மென் விரல்களால் மெது வாக மீட்டிக் கொண்டிருந்த ஒரு யுவதி, என்னைக் கண்டதும் வீணையை நகர்த்திவைளாய்ச் 'சரே'லென்று எழுந்தாள்.

சித்திர ஆசானின் மகள் சௌந்தரவல்லி !

அந்தப் பெண்ணா? ஊர் உயர்தர ஆரம்பப் பாடசாலையில் நான் படித்துக் கொண்டிருந்த போது, 'டிராயிங் மாஸ்டருக்கு' இந்தப் பெண் துலக்கமான ஒரு வெண்கலக் கூஜா வில் சுக்குநீர் கொண்டு வருவாள். சின்னப் பாவாடையும் கொத்தவரங்காய் உருவமு மாக இருந்த இந்தச் சௌந்தரத்தின் எலி வால் பின்னலை நீரு படம் எழுதும்படி டிராயிங் மாஸ்டரை நாங்கள் எப்படிக் கெஞ்சு வோம் !

அந்த சௌந்தரம் இப்படி சௌந்தர வல்லியாகி இருக்கிறாள்!

அழகின் கொழுந்து — இல்லை, அழகின் சிகரம் — இல்லையில்லை, எனது நேர்த்தியான தொரு சித்திரத்தில் தீட்டப்பெற வேண்டிய அழகு அது.....

''சௌந்தரம்தானே?....'' என்றேன்.

''ஆமாம்.... உங்களையும் எனக்கு நன் றாய்த் தெரியும்..... உங்களுடைய சித்திரங் களில்தான் வாரா வாரம் உங்களைப் பார்க் கிறேமே.....!'' — கணீரென்றும் கலகல வென்றும் பேசினாள் சௌந்தரவல்லி.

''சௌக்கியம்தானே ? அப்பா எங்கே அம்மா......?''

''அப்பா தஞ்சாவூர் போயிருக்கிறார். வர இரண்டு மூன்று நாளாகும்.... அம்மா, அம்மாதான்!'' என்றாள் சிரித்துக்கொண்டே. அதாவது 'அம்மா போய் விட்டாள்' என்று அர்த்தம்.

அங்கேயிருந்த ஒரு நாற்காலியில் உட் கார்ந்து கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந் தேன்.

''அப்பா உங்களைப் பற்றி ரொம்பப் பெருமைப்படுவார்.....''





''அப்படியா?''

''ஆமாம். அப்பாவுக்கு இருப்பவற்றை, எழுதினவற்றைத் திரும்பத் திரும்பச் சித்திரமாக எழுதுவதும், அவற்றை மாணவர்களுக்குக் கரும் பலகையில் வரைந்து காட்டி, 'பிள்ளைகளே, இது எதன் படம்?' என்று கேட்பதும் அலுத்துப் போய் விட்டனவாம். ஆனால் நீங்கள் உயிர்ப் பொருள்களுக்கு உங்கள் சித்திரங்களின் மூலம் உயிர் ஊட்டுவது மட்டுமின்றி, உயிரற்ற சடப் பொருள்களுக்கும்கூடச் சித்திரங்களில் உயிர் ஊட்டுபவர் என்று அடிக்கடி அப்பா சொல்லுவார்.........!''

''சௌந்தரம்! எனக்குக்கூட நன்றாக நினைவிருக்கிறது. நான் டிராயிங் வகுப்புகளில் அத்தனை சூடிகை இல்லைதான். ஒரு பெட்டியின் படத்தை என்னால் சுத்தமாக வரைய முடியாது; ஆனால் அந்தப் பெட்டியோடு அதன் சூழ்நிலையின் படப் பிடிப்பே என் உள் அந்தரங்கத்துள் நிகழ்ந்து என்னைக் கற்பனை உலகின் அவஸ்தைகளுக்கு ஆளாக்கும்.... பார்க்கப் போனால் இந்த அவஸ்தைகள்தாம் காரணமோ என்னவோ, நான் ஓர் ஓவியனாக மலர்ந்துவிட்டேன்.....''

நான் இப்படிச் சிரித்துக் கொண்டே சொல்ல, சௌந்தரவல்லியும் சிரித்தபடி நான் சொன்னவற்றைக் கேட்டாள். அவளிடம் விடைபெற்று வீடு வந்தேன்.

எத்தனையோ பெண் உருவங்களை வரைந்திருக்கிறேன். இத்தனை சாமுத்திரிகா லட்சணங்கள் உள்ள பெண் இந்த உலகத்தில், இந்தக் காலத்தில் எங்கும் இருக்க மாட்டாள் என்று நினைக்கும் வண்ணம்கூடக் கற்பனைப் பெண்களின் வடிவங்களைச் சித்திரித்திருக்கிறேன்.

ஆனால் இந்த சௌந்தரவல்லியின் அழகு எதையோ — எதொன்றின் நினைவையோ — எனக்கு வலியுறுத்துவதைப் போல் இருந்தது.

என் அறையில் உட்கார்ந்து கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தேன். இதோ நினைவுக்கு வந்துவிட்டது......!

சௌந்தரவல்லி அவளுடைய தாயார் மதுரத்தையே — மதுரவல்லியையே — அப்படியே அச்சாகக் கொண்டல்லவா பிறந்திருக்கிறாள்!

மதுரவல்லி !...

பல ஆண்டுகளுக்கு முன்பு.... அப்போது நான் சின்னப் பையன்.....

டிராயிங் மாஸ்டர் கனகலிங்கத்தின் திருமணத்தைப் பற்றிய இலேசான நினைவு. யாரோ ஊர் பேர் தெரியாத ஒரு பெண்ணை அவளுடைய கொள்ளை அழகில் மட்டும் மயங்கிக் கனகலிங்கம் கல்யாணம் செய்து கொண்டு அழைத்து வந்து விட்டார் என்று ஊர்ப் பேச்சு. கனகலிங்கத்தின் வீட்டு வாசலில் போலீஸ் காவல்கூடச் சில நாட்கள் போடும்படி ஆயிற்று அந்த நாட்களில்.

எனக்கு ரொம்பச் சின்ன வயதுதான்; பத்துப் பிராயம் இருக்கும் அப்போது.

பின்னால் ஓர் ஓவியனாக — உலக அழகினுடைய பலவிதமான மேம்பட்ட உருவங்களை உள்ளது உள்ளபடித் தீட்டிக் காட்டும் ஓர் ஓவியனாக — வர இருப்பதன் உணர்வு என் உள்ளத்தில் உலவியதாலோ என்னவோ, அந்தப் பாலப் பருவத்திலேயே மதுரவல்லியை — கனகலிங்கத்தின் அந்த இலட்சிய மனைவியை — நான் பார்த்தபோது நெஞ்சுக்குள் பிரமிக்கவே செய்தேன்.

என்னுள் இந்தப் பரிசுத்தமான அழகுணர்வான ஓவியத் திறனை ஊக்குவித்ததே அந்தக் குருபத்தினியின் மாசற்ற அழகுதானோ என்னவோ ?

என்னை எத்தனையோ பேர் கேட்கிறார்கள், 'நீங்கள் ஓவியராக உங்களை உணர்ந்தது எப்படி ?' என்று. அப்போதெல்லாம் பதில் இறுக்க முடியாமல் இணறியிருக்கும் நான், இப்போதுதான் உணர்கிறேன், இதய அந்தரங்கத்துக்குள் பதுங்கியிருக்கும் இந்தத் தெய்விக உணர்வின் மூலாதாரத்தை!

கனகலிங்கம் வெளியூரிலிருந்து திரும்பி விட்டார். என்னை — அவரது மாணாக்கனை — மலர்ந்த முகத்துடன் வரவேற்றார். எனது சித்திரங்களை வானளாவப் புகழ்ந்தார்.

திடீரென்று என் கரங்களைப் பற்றிக் கொண்ட அவரது கண்கள் கலங்கின. எனக்கொன்றும் புரியவில்லை.

''தம்பி ! ஒரு விஷயம்.....''

''என்ன சார்.....!''

''எனக்கு — எனக்கென்று — ஒரு படம் நீ எழுதித் தர முடியுமா ?''

டிராயிங் மாஸ்டரா இப்படிப் பேசுகிறார்? நான் நாக் குழறினேன். ''எந்தச் சித்திரம் வேண்டுமானாலும் எழுதித் தருகிறேன், சார்'' என்றேன்.

''மதுரவல்லியின் ஒரு போட்டோகூட இல்லை, தம்பி! அவளை எப்படி நீ படம் எழுதுவாய் ?'' என்று டிராயிங் மாஸ்டர் கேட்கவும், கொஞ்சம் விதிர்விதிர்த்து விட்டேன்.

''சார்......''

''ஆமாம், தம்பி ! உனக்குத்தான் அந்த விஷயமெல்லாம் நல்லாத் தெரியுமே! 'வைர ஊசி என்கிறதுக்காகக் கண்ணைக் குத்திக் கொள்ளுவார்களா? அழகு என்கிறதுக்காக ஊர் பேர், இனம் குலம் தெரியாத ஒரு பெண்ணைக் கட்டிக்கிடுவதா?' என்றுதான் ரொம்ப காலத்துக்குப் பசி தீர ஊர் வாய் பேசித் தீர்த்ததே! அப்புறம் இந்த மதுரவல்லி இந்த சௌந்தரத்தைப் பெற்று என் மடியிலே போட்ட ஆறு மாசத்துக்கெல்லாம் சின்ன ஜுரம் என்று பெயர் பண்ணிப் பெரிசாக் கண்ணை மூடினப்போ இந்த ஊர், 'அழகுக்கு அழகு, குணத்துக்குக் குணம் ! நல்ல பேர் சொல்லிட்டுப் போய்ச் சேர்ந்தா மகராஜி'ன்னு பேசப் பேசியதும் உனக்கு நல்லாத் தெரியும்..... ஆறு தம்பி, இந்த ஊர் கிடக்கட்டும், என் மனசுக்கு மனசாய் மதுரவல்லி இருந்தது எனக்கு உசிரான ஓர் அநுபவம். அதனாலே இந்த வீட்டுக் கூடத்துச் சுவரிலே நடுநாயகமாய் அவளுடைய 'பெயிண்டிங்' ஒன்றை மாட்டி வைக்க ஆசைப்படுகிறேன்.... அதை நீதான் தீட்டித் தர வேண்டும், தம்பி......'' என்று நீண்டு பேசி நிறுத்தினார் கனகலிங்கம்.

''முயற்சி செய்கிறேன் சார்...'' என்றேன். அப்போது சௌந்தரவல்லி அங்கே காப்பி




# ஒவல்டின்

## ஒப்பற்ற 'ஒலிமபிக்' பானம்

'ஒலிம்பிக்' தென்பை உங்களுக்குத் தருவதற்கென சக்தி செறிந்து வருகிறது.

மற்றெந்த உணவு பானத்தையும் விட அதிக மால்ட் அடங்கப்பெற்று, சக்தி செறிவூட்டப்பட்டது ஒவல்டின். மால்ட் என்பது தென்பு தரும், இயற்கையின் ஒப்பற்ற ஊட்டப் பொருள்களில் ஒன்றாகும். அதிக மால்ட், பால், வைட்டமின்கள், புரதங்கள், கார்போஹைட்ரேட்டுகள், யாவும் அடங்கிய ஒவல்டின், ஆட்ட வீரர்களுக்குக் கிடைக்கும் அதே 'ஒலிம்பிக்' தென்பை உங்கள் குடும்பத்திற்கும் அளிக்கும்.

அருந்துங்கள் ஒவல்டின்: உடல்நலத்திற்கு ஒவல்டின், வலிமைக்கு ஒவல்டின், தென்புக்கு ஒவல்டின்.

சக்தி செறிவிக்கப்பட்ட ஒவல்டின், 1932 முதல் நடத்தப்பட்டுவரும் 7 ஒலிம்பிக் ஆட்ட விழாக்களிலும் அங்கீகாரம் பெற்ற ஒரே ஒரு பானமாக விளங்கிவருகிறது.

## ஒவ்வொரு துளியிலும் ஊக்கம் துள்ளும்

ஒவல்டினைப் பாரதத்தில் ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்., நிறுவனம், லண்டனிலுள்ள ஏ வாண்டர் லிமிடெட்டின் லைசென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது.

ASP/J/1/3

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.

யுடன் வந்தான். கனகலிங்கம் புன்முறுவலிக்கும் தம் பெண்ணைப் பார்த்துக் கொண்டே, ''இது அச்சு அவ அம்மாவேதான், தம்பி! ஆறு படம் எழுதப் போறவன் நீ! எப்படியோ முடிவு செஞ்சுக்க! நீ எழுதப் போற அந்தப் படம் மட்டும் என் 'உயிரின் படமாக' — மதுரவல்லியின் உயிர்ச்சித்திரமாக — இருக்கட்டும், அவ்வளவுதான்!'' என்று கூறவும் எனக்கு மெய் சிலிர்த்தது.

நான் சென்னைக்கு வந்து ஒரிரு மாதங்களுக்குப் பிறகுதான் கனகலிங்கத்தின் 'உயிரின் படத்தை' எழுதி முடித்தேன்.

எதிரே சித்திரச் சாய்வில், 'கான்வஸ்' துணியில், மதுரவல்லியின் — குருபத்தினியின் முக அழகின் கவர்ச்சியையும் அமைதியையும் தெய்வத் தன்மையையும் முழுவதும் கொண்டு வர வெகுவாகப் பாடுபட்டிருந்ததன் பலன் எனக்குக் கிட்டிவிட்ட திருப்தியை எனது சிருஷ்டி எனக்குத் தந்து கொண்டிருந்தது.

மதுரவல்லியின் கண்களில் உயிரொளி படர்ந்திருந்தது. அதிலிருந்து புறப்பட்ட ஒரு கிரணம் எனக்கு மாற்றறியாத உண்மை உணர்வை அறிவுறுத்தியது.

என் உள்ளத்தினுள்ளே அடைபட்டிருந்த ஓவிய உணர்வைத் தட்டி எழுப்பியது இந்தத் தெய்விக முககாந்தி அல்லவா?

உண்மையில் இது கனகலிங்கத்துக்கு மட்டும்தானா உயிரின் படம்?

எனக்கும்கூட அப்படித்தான்.

இது எனக்குத் தாய்ச் சித்திரம். என் உள்ளத்துள்ளே உறைந்த தெய்வ உணர்வை அதன் கர்ப்பக்கிருக இருட்டை நீக்கித் தூண்டாவிளக்கொளியுடன் துலக்கிக் காட்டிய சித்திரம்....

ஆசானுக்குப் படத்தை அனுப்பிவைத்தேன்.

ஒரு வாரத்துக்குப் பிறகு எனக்கு இரண்டு கடிதங்கள் வந்தன.

ஒன்று அவரிடமிருந்து:

''....இந்த வீட்டில் நான் எங்கே சென்றாலும் அங்கெல்லாம் என்னைத் தொடர்ந்து வருவதைப் போல் மதுரவல்லியின் கண்களை எப்படித்தான் எழுதினயோ? நிச்சயம் ஒரு நாள் இந்தப் படத்தின் மூலமாக அவள் உயிர் பெற்று விடுவாள் போலிருக்கிறதே!....''

மற்றொரு கடிதம் —

ஆம். சௌந்தரவல்லியிடமிருந்துதான்:

''...அம்மா இத்தனை அழகாயிருந்தாளா? இந்தப் படம், உண்மையைச் சொல்லப் போனால், ஒரு பெண்ணான எனக்குக் கொஞ்சம் பொறாமையைக்கூடத் தருகிறது. என் தாயின் உயிர்ச் சித்திரத்தைத் தீட்டித் தந்ததற்கு உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேனோ, தெரியவில்லை....!''

டிராயிங் மாஸ்டருக்கு அது மனைவியின் உயிர்ச் சித்திரம்; அவர் மகளுக்கு அது பாசம் ததும்பும் தாயின் உயிர்ச் சித்திரம் —

எனக்கோ? என் கலை உணர்வுக்கு வித்திட்ட அந்தத் தெய்விக அழகுக்கு நான் செலுத்திய காணிக்கைச் சித்திரமல்லவா?

---

## ஆதரிசக் கணவர்



அது 1944ஆம் வருடம். அன்னை கஸ்தூரி பாவும் அண்ணல் காந்திஜியும் சிறையிலிருந்த காலம். சிறையில் பாவுக்கு உடல்நலம் மோசமாகிவிட்டது. மார்பு வலியில் தொடங்கி நிமோனியாவில் கொண்டு விட்டது. 'ராமா, ஹே ராமா! என்று அனற்றிக்கொண்டேயிருந்தார். பாபு இரவிலும் பகலிலும் பாவிடம் வந்து உட்கார்ந்து கொண்டிருப்பார். கட்டிலில் சாய்ந்திருப்பதைவிட எவர் மீதாவது சாய்ந்து கொண்டு உட்காரவே விரும்புவார் அன்னை. பாபுஜி அவர் அருகில் வந்து உட்காரும்போது அவர் மீது சாய்ந்து கொள்வார். அவர் உட்கார்ந்திருப்பதில் பாவுக்குச் சிறிது அமைதி ஏற்பட்டு வந்தது.

பலவீனம் அதிகமாகி விட்டதனால் பா எச்சில் உமிழும்போது அவருடைய வாயைத் துடைக்க வேண்டியிருந்தது. துணியைத் துண்டுகளாகக் கிழித்து வைத்துக் கொண்டு அதனால் துடைத்து வந்தனர். பாபுஜி அசுத்தமான அத்துண்டுகளைக் கழுவுவதற்காகத் தாமே எடுத்துச் சென்றுவிடுவார். தடுத்தால் ''நான்தான் கழுவுகிறேனே. எனக்கு இதைச் செய்வதென்றால் மிகவும் பிடிக்கிறது'' என்று கூறுவார்.

''சுசுருஷையை நாங்கள் செய்கிறோம். நீங்கள் உங்கள் நேரத்தை மிச்சப்படுத்திக் கொள்ளுங்கள்'' என்று பாபுஜியிடம் யாராவது சொன்னால், அதற்கு பாபுஜி, ''நீங்கள் சேவை செய்யச் சித்தமாயிருப்பது எனக்குத் தெரியும். ஆனால் இறுதிக் காலத்தில் பாவுக்குச் சேவை செய்ய எனக்குக் கடவுள் இந்தச் சந்தர்ப்பத்தை அளித்திருக்கிறாரே, அதை மதிப்பிட முடியாத வாய்ப்பென்று நான் கருதுகிறேன்'' என்று கூறிவிடுவார்.

அன்னை பா இறப்பதற்கு இரு தினங்கள் முன்பிருந்தே அவர் யாருடைய மடியில் கடைசி மூச்சை விடப் போகிறார் என்பது பற்றிப் பாபுஜி பேச ஆரம்பித்துவிட்டார். ''எந்த பாக்கியசாலிக்கு அது கொடுத்து வைத்திருக்கிறதோ, யார் அவ்வளவு கவனமாக அவளுக்குச் சேவை செய்து வருகிறார்களோ? கடவுள் ஒருவருக்கே அது தெரியும்'' என்றார். இந்த பாக்கியம் அவருக்கே கிடைத்தது.

— இரா. பாலாஜி

---




- பணவீக்கத்தின் பலன் யாருக்கு?
- காணி நிலம்: வேண்டும் - வேண்டாம்
- கல்லுக்குள் ஊற்று
- அங்குசம் தாக்காதா?

**வி**யாபாரிகளுக்கும், விவசாயிகளுக்கும் கட்டாய சேமிப்புத் திட்டம் கொண்டு வர மத்திய சர்க்கார் உத்தேசித்திருப்பதாகச் செய்தி வெளி வந்துள்ளது. 'தற்போது ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியினாலும், பணவீக்கத்தினாலும் பெரிதும் பலனடைந்திருப்பவர்கள் விவசாயிகள். ஆதலால் இத்திட்டம் கொண்டு வரப்படுகிறது' என விளக்கியுள்ளார்கள். இது அநியாயம்.

ஓராண்டுக்கு முன்னர் ரிசர்வ் பாங்கி அறிக்கை ஒன்றில், "நம் நாட்டில் கிராமத்தில் உள்ள குடும்பங்களில் அறுபத்தைந்து சதவிகிதக் குடும்பங்கள் கடனில் ஆழ்ந்துள்ளன" என்று கூறியிருக்கிறது. கிராமத்தில் உள்ள குடும்பங்கள் என்றால் பெரும்பாலும் விவசாயிகள் குடும்பம்தானே ?

மேற்கொண்டு, சென்ற ஆண்டுக் கடனை அடைக்க முடியாத நிலையில் இந்த ஆண்டுக்கான சாகுபடி செலவுகளுக்குக் கூட்டுறவு சங்கங்களில் புதிய கடன் வாங்க முடியாமல் விவசாயிகள் லேவாதேவிக்காரர்களிடம் நூறு ரூபாய்க்கு ஒரு மூட்டை வட்டி வீதம்கடன்கள் வாங்கிச் சிரமத்துடன் சாகுபடி செய்துள்ளனர்.

கடந்த மூன்று ஆண்டுகளாக இயற்கை ஒத்துழைக்க வில்லை; ஆண்டுக்கு ஆண்டு சாகுபடிச் செலவு அத்துக்கு மீறி அதிகரித்து வருகிறது. சர்க்காரால் விற்கப்படும் ரசாயன உரங்களே இரண்டு ஆண்டுக்கு முன் மூட்டை இருபத்தைந்து ரூபாய்க்கு விற்றது இன்று நாற்பது ரூபாயாகி விட்டது.

உண்மையில் பொருளாதார நெருக்கடியாலும் பணவீக்கத்தாலும் பலனடைந்தவர்கள் அரசியல்வாதிகளும் அவர்களிடம் சலுகை பெற்றவர்களுமே. இதை அரசாங்கம் உணர்ந்தும், அப்பாவியான விவசாயிகளின் தலையில் பழி சுமத்த முற்பட்டிருப்பது கண்டு வேதனைப்படுகிறேன்.

வரகூர் (தஞ்சை) வி. ஏ. பாலகிருஷ்ணன்

"**பா**ட்டுக்கொரு புலவ"னின் நினைவு நாளையொட்டி, 'கல்கி' அளித்த திரு கு. அழகிரிசாமி அவர்களுடைய 'காணி நிலம்' கட்டுரை — இலக்கிய மகுடம்! "யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், வள்ளுவர் போல், இளங்கோவைப் போல்" மட்டுமல்ல — பாரதியைப் போலவும்கூட "யாங்கணுமே பிறந்ததில்லை" என்று ஆசிரியர் எடுத்துக் காட்டிவிட்டார். கௌளியின் கவிதையையும், லெர்மாந்தோவின் கவிதையையும் தமிழாக்கியதன் மூலம் "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களை மொழிபெயர்த்தும்" பாரதியின் வாக்கைக் காத்திருக்கிறார் திரு கு. அழகிரிசாமி !

தர்மபுரி "தமிழ்க்கிரேன்"

**தி**ரு அழகிரிசாமி அவர்கள் எதை எழுதினாலும் அதில் ஒரு புது நயமும் பொருளும் கண்ணோட்டமும் இருப்பது மகிழ்ச்சிக்குரியதுதான்! என்றாலும் பாரதிக்கு ஈடு இப்பாரினில் இல்லை என்று சொல்லி விடுவதோ, அதற்காகப் பெரும் பிரயாசை மேற்கொண்டு — தம் கருத்துக்களுக்கு உடன்படுமாறு—ஒரு சில வெளிநாட்டுக் கவிதைகளை மொழிபெயர்த்து, பாரதியாருடன் ஒப்பிடுவதோ பெருமைக்குரியதல்ல. அவரவர் நாட்டுப் பிரச்னைகளும் பண்பும் தேவையும் மாறுபடுகிற போது கவிஞனின் குரலிலும் அதன் எதிரொலி தொனிக்கத்தான் செய்யும்.

புதுதில்லி-5 ஏ. ஆர். ராஜாமணி

'**க**ல்லுக்குள் 'ஈரம்' தொடர்கதையைப் படிக்கும் தோறும், முடிவு பெறாமல், தொடர்ந்து கொண்டே இருக்காதா என்ற ஆர்வம் எழுகின்றது. இளைஞர் சமுதாயத்துக்கு இன்ப ஊற்றாக அமைந்துள்ளது கதை.

சென்னை-3 வி. பி. ராஜு

**செ**ன்ற 3-9-67 இதழில் வெளியான "அங்குசம் தாக்கிய டைரக்டர்" கட்டுரை, தமிழ்ப்பட உலகம் படித்துப் படித்துப் பயன்பெற வேண்டிய ஒன்று. பாடலையும் இசையையும் காட்சியமைப்பையும் காப்பியடிக்கும் நமது தமிழ்ப் பட உலகம் இது போன்ற புகழ்பெறும் விஷயங்களைக் காப்பியடிக்கத் தவறிவிடுகிறதே.

கும்பகோணம், டி. எஸ். சீதாபதி

"**ம**ணக்கோல"த்தில் சந்தானம், ஜானு இவர்கள் உரையாடல் மூலமாக ஆசிரியர் எவ்வளவு அழகாகச் சித்திரிக்கிறார், தியாகம் கடமையைப் பற்றி!

நல்ல குத்தல் (Satire) உடைய படைப்பு "யாரோ இவர் யாரோ?" வாசகர்களுடன் நேரடியாகப் பேசுவது போலவே அமைந்துள்ளது.

திருச்சி-3 தில்லைநகர் எல். வி. கணபதி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
**Managing Editor:, T. Sadasivam.**

# பாண்ட்ஸ்

ட்ரீம்ஃப்ளவர்
ஃபேஸ் பவுடர்




**சொப்பன
சுந்தரியின்
வதனப் பொலிவை
உங்களுக்கு அளிக்கும்!**

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் சீராகப் படிந்து முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்கிறது...முகத்தைப் பளிச்சென்று வைக்கிறது! உங்கள் சரும நிறத்திற்கேற்றபடி தேர்ந்தெடுக்கப் பலவித வண்ணங்களில் கிடைக்கின்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. வில் இணைக்கப்பட்டது)

P. 5769

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி